

க.பொ.த. (உ.தர)ப் பரீட்சை - 2015

# மதிப்பீட்டு அறிக்கை

# 33 - கணக்கீடு




ஆய்வு அபிவிருத்திக் கிளை
தேசிய மதிப்பீட்டிற்கும் பரீட்சித்தலுக்குமான சேவை
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

Download Past Papers at : www.freebooks.lk

# க.பொ.த (உ.தர)ப் பரீட்சை - 2015

# மதிப்பீட்டு அறிக்கை

# 33 - கணக்கீடு




**ஆய்வு அபிவிருத்திக் கிளை**
**தேசிய மதிப்பீட்டிற்கும் பரீட்சித்தலுக்குமான சேவை**
**இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்**

Download Past Papers at : www.freebooks.lk

# அறிமுகம்

கல்விப் பொதுத் தராதரப் பத்திர உயர் தரப் பரீட்சையானது இலங்கையின் உயர்மட்ட இரண்டாம் நிலைக் கல்வியின் இறுதிச் சான்றிதழ்ப் பரீட்சையாகும். உயர்மட்ட இரண்டாம் நிலைக் கல்வியின் இறுதியில் மாணவர்களின் அடைவு மட்டத்தைச் சான்றுப்படுத்தல் இப் பரீட்சையின் முக்கிய நோக்காக இருந்த போதும் தேசிய பல்கலைக்கழகங்கள், வேறு கல்வி மற்றும் தொழில் பயிற்சி நிறுவனங்கள், தேசிய கல்வியியல் கல்லூரிகள் என்பவற்றுக்குத் தகைமையானோரைத் தெரிவு செய்தலும் இப்பரீட்சையின் பெறுபேறுகளின் அடிப்படையில் இடம்பெறுவதால் அடைவுப் பரீட்சையாகவும் தேர்வுப் பரீட்சையாகவும் க.பொ.த (உ.தர)ப் பரீட்சை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த தன்மையைப் பெறுகிறது. மேலும் மூன்றாம் நிலையில் தொழிலில் பிரவேசிப்பதற்கான தகைமையை சான்றுப்படுத்தும் பரீட்சையாகவும் இது ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. இப்போது இப்பரீட்சைக்காக 2015 ஆம் ஆண்டில் 210340 வரையிலான பாடசாலைப் பரீட்சார்த்திகளும் 44851 வரையிலான தனிப்பட்ட பரீட்சார்த்திகளும் தோற்றியிருந்தனர்.

இப்பரீட்சையில் உயர் அடைவு மட்டத்தைப் பெறுவதற்காக மாணவர்களும் அவர்களின் எதிர்பார்ப்புகளை நிறைவு செய்வதற்காக ஆசிரியர்களும் பெற்றோரும் பெரிதும் முயற்சி செய்கின்றனர். இந்த மதிப்பீட்டு அறிக்கையை அவர்களின் அந்த எதிர்பார்ப்புக்களை நிறைவேற்றுவதற்கு உதவும் பொருட்டே இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் தயாரித்துள்ளது. இந்த மதிப்பீட்டு அறிக்கையில் உள்ளடக்கப்பட்ட தகவல்கள் பரீட்சையை எதிர்பார்த்திருப்போர், ஆசிரியரிமார், அதிபர்மார், ஆசிரியர் ஆலோசகர்கள், பாடப் பொறுப்புக் கல்விப் பணிப்பாளர்கள் பெற்றோர், கல்வி ஆய்வாளர்கள் அனைவருக்கும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

இந்த மதிப்பீட்டு அறிக்கை I, II, III என மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது.

க.பொ.த (உ.தர) கணக்கியல் பாடத்தின் நோக்கம் பாட அடைவு பற்றிய தகவல்கள் இந்த அறிக்கையின் பகுதி I இல் அடங்கியுள்ளது. இப்பகுதியில் பாடத்திற்கு தோற்றிய பரீட்சார்த்திகளின் எண்ணிக்கை, அவர்கள் தரங்களைப் பெற்றுள்ள விதம், மாவட்ட மட்டத்தில் பாடசாலைப் பரீட்சார்த்திகள் தரங்களைப் பெற்றுள்ள விதம் வகுப்பாயிடைக்கேற்ப புள்ளிகளின் பரம்பல் ஆகிய பாட அடைவு பற்றிய புள்ளிவிபரத் தகவல்களும் கணக்கியல் பாடத்தின் வினாத்தாள் I, II என்பவற்றில் வினாக்கள் தெரிவு செய்யப்பட்ட விதம், அவ்வினாக்களுக்கும் அவ்வினாக்களின் பகுதிகளுக்கும் புள்ளிகள் பெற்றுள்ள விதம் என்பன பற்றி விரிவாகக் குறிப்பிடும் பாட அடைவு பற்றிய பகுப்பாய்வும் உள்ளடக்கப்பட்டுள்ளன. க.பொ.த (உ.தர)ம் - 2015 பரீட்சையில் கணக்கியல் பாடத்தின் வினாத்தாள் I, II என்பவற்றுக்கான வினாக்கள் அவ்வினாக்களுக்கு பரீட்சார்த்திகள் விடைகள் அளித்திருந்தமை பற்றிய தகவல்கள் இந்த அறிக்கையின் பகுதி II இல் அடங்கியுள்ளன. அதில் வினாத்தாள் I, II என்பவற்றின் வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகள், புள்ளி வழங்கும் திட்டம், விடைகள் அளித்தமை பற்றிய அவதானிப்புக்கள், முடிவுகள், பாட அடைவை மேம்படுத்துவதற்கான ஆலோசனைகள் என்பனவும் உள்ளடக்கப்பட்டுள்ளன.

இலங்கைப் பரீட்சைத் திணைக்களத்தின் ஆய்வு அபிவிருத்திக் கிளை மூலம் விடைத்தாள் மதிப்பீட்டில் ஈடுபட்ட பிரதம பரீட்சகர், மேலதிக பிரதம பரீட்சகர், உதவிப் பரீட்சகர்கள் ஆகியோரால் முன்வைக்கப்பட்ட தகவல்கள், அவதானிப்புகள், கருத்துகள், ஆலோசனைகள், மரபு ரீதியான சோதனைக் கோட்பாடு (Classical Testing Theory) மற்றும் உருப்படித் துலங்கள் கோட்பாடு (Item Response Theory) என்பவற்றைப் பயன்படுத்தி பரீட்சார்த்திகளின் துலங்கல்களைப் பகுப்பாய்வு செய்தலினூடாகப் பெறப்பட்ட தகவல்கள் என்பன இந்த மதிப்பீட்டு அறிக்கையை தயாரிப்பதற்கு ஆதாரமாகக் கொள்ளப்பட்டுள்ளன.

வினாப்பத்திரத்திலுள்ள ஒவ்வொரு வினாக்களுக்கும் விடையளிக்கும்போது பரீட்சார்த்திகள் கவனத்தில் கொள்ள வேண்டிய விடயங்கள், கற்றல் - கற்பித்தல் பணிகள் பற்றிய கருத்துகள், ஆலோசனைகள் என்பனவும் இந்த அறிக்கையில் பகுதி III இல் அடங்கியுள்ளன. பல்வேறு தேர்ச்சிகள் அத்தேர்ச்சி மட்டங்களை அணுகுவதற்கான கற்றல் - கற்பித்தல் செயன்முறையை ஒழுங்கமைக்கும் விதம் என்பன தொடர்பாக இந்த அறிக்கையானது பெரிதும் துணை புரியும் என நம்புகின்றேன்.

எதிர்காலத்தில் தொகுக்கப்படும் மதிப்பீட்டு அறிக்கைகளின் பண்புத்தரத்தை மேம்படுத்தக்கூடிய பயன்தரும் கருத்துகள், ஆலோசனைகள் என்பவற்றை எங்களுக்குச் சமர்ப்பிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த அறிக்கையைத் தயாரிப்பதற்குத் தேவையான தகவல்களை வழங்கிய பிரதம பரீட்சகர், மேலதிக பிரதம பரீட்சகர், உதவிப் பரீட்சகர்கள், ஊக்கத்துடன் பங்களிப்பு வழங்கிய குழு உறுப்பினர்கள், பொறுப்புடன் கடமையாற்றிய இலங்கைப் பரீட்சைத் திணைக்கள அலுவலர்கள், பணிக்குழுவினர் ஆகியோருக்கும் இத்தொகுப்புக்கான நிதி அனுசரணை வழங்கி எதிர்கால அறிவை மையமாகக் கொண்டு பாடசாலை முறைமையை மீளமைக்கும் செயற்றிட்டத்துக்கும் (TSEP - WB) எனது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன்.

டபிள்யூ.எம்.என்.ஜே. புஷ்பகுமார
பரீட்சை ஆணையாளர் நாயகம்.

2016 ஜுன் 29
ஆய்வு அபிவிருத்திக் கிளை,
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்,
பெலவத்தை,
பத்தரமுல்ல.



Download Past Papers at : www.freebooks.lk

| | | |
|---|---|---|
| **வழிகாட்டல்** | : | டபிள்யூ.எம்.என்.ஜே. புஷ்பகுமார<br>பரீட்சை ஆணையாளர் நாயகம் |
| **ஒழுங்கமைப்பும் நெறிப்படுத்தலும்** | : | கயாத்திரி அபேகுணசேகர<br>பரீட்சை ஆணையாளர்<br>(ஆய்வு அபிவிருத்திக் கிளை) |
| **இணைப்பாக்கம்** | : | மனோமி செனெவிரத்ன<br>உதவிப் பரீட்சை ஆணையாளர் |
| **பாட இணைப்பாக்கம்** | : | புத்திகா பெரேரா<br>பிரதிப் பரீட்சை ஆணையாளர் |
| **தொகுப்பு** | : | கயாத்திரி அபேகுணசேகர<br>பரீட்சை ஆணையாளர்<br>(ஆய்வு அபிவிருத்திக் கிளை)<br><br>கலாநிதி டபிள்யூ.வீ.ஏ.டீ. கருணாரத்ன<br>சிரேஷ்ட விரிவுரையாளர்<br>கணக்கியல் கல்விப் பிரிவு<br>களனி பல்கலைக்கழகம்<br><br>கலாநிதி ஹரேந்திர காரியவசம்<br>சிரேஷ்ட விரிவுரையாளர்<br>கணக்கியல் பிரிவு<br>ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம்<br><br>ரங்கஜீன ஹேரத்<br>விரிவுரையாளர்<br>கணக்கியல் பிரிவு<br>ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம் |
| **ஆக்கக் குழு** | : | சந்திராணி ரூபசிங்ஹ<br>இராஜசிங்க ம.ம.வி<br>ஹங்வெல்ல |
| **மொழிப்பெயர்ப்பு** | : | சி.எல்.எம் நவாஸ்<br>ஆசிரிய ஆலோசகர்,<br>வலயக் கல்விப் பணிமனை<br>இப்பாகமுவ |
| **கணினிப் பக்க வடிவமைப்பு** | : | சுப்ரமணியம் காஞ்சனா<br>கணினித் தரவுப் பதிவாளர் |
| **முகப்பு அட்டை வடிவமைப்பு** | : | வை.எஸ். அனுராதி<br>அபிவிருத்தி அதிகாரி |



Download Past Papers at : www.freebooks.lk

## உள்ளடக்கம்

பக்க எண்


பகுதி I

1 பாடக் குறிக்கோள்களும் பாட அடைவு தொடர்பான தகவல்களும்

1.1 பாடக் குறிக்கோள்கள் 1

1.2 பாட அடைவு தொடர்பான புள்ளிவிபரத் தகவல்கள்

1.2.1 இப்பாடத்துக்குத் தோற்றிய பரீட்சார்த்திகளின் எண்ணிக்கை 2
1.2.2 பரீட்சார்த்திகளினால் தரங்கள் பெறப்பட்டுள்ள விதம் 2
1.2.3 மாவட்ட அடிப்படையில் முதல் முறையாகத் தோற்றிய பாடசாலைப் பரீட்சார்த்திகளால் தரங்கள் பெறப்பட்டுள்ள விதம் 3
1.2.4 வகுப்பாயிடை அடிப்படையில் புள்ளிகள் பெறப்பட்டுள்ள விதம் 4

1.3 பாட அடைவு பற்றிய பகுப்பாய்வு
1.3.1 வினாத்தாள் I இன் அடைவு 5
1.3.2 வினாத்தாள் II இல் வினாக்கள் தெரிவு செய்யப்பட்டுள்ள விதம் 6
1.3.3 வினாத்தாள் II இல் புள்ளிகள் பெறப்பட்டுள்ள விதம் 6
1.3.4 வினாத்தாள் II இன் அடைவு 7

பகுதி II

2 வினாக்களும் அவற்றிற்கு விடையளிக்கப்பட்டமை தொடர்பான விபரங்களும்
2.1 வினாத்தாள் I உம் அதற்கு விடையளிக்கப்பட்டுள்ளமை தொடர்பான விபரங்களும்

2.1.1 வினாத்தாள் I இன் கட்டமைப்பு 8
2.1.2 வினாத்தாள் I இன் வினா இல. 1 - 30 வரையான வினாக்கள் 9
2.1.3 வினாத்தாள் I இல் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளி வழங்கும் திட்டமும் 16
2.1.4 வினாத்தாள் I இல் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளி வழங்கும் திட்டமும் 17
2.1.5 வினாத்தாள் I இற்கு விடையளிக்கப்பட்டுள்ள விதம் பற்றிய முழுமையான அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள் 24
2.1.6 வினாத்தாள் I இல் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்குரிய விடைத் தெரிவுக்கான துலங்கல்கள் (வீதங்களில்) 25
2.1.7 வினாத்தாள் I இல் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு புள்ளிகள் வழங்கப்பட்டுள்ள விதம் 28

2.2 வினாத்தாள் II உம் அதற்கு விடையளிக்கப்பட்டுள்ளமை தெடர்பான தகவல்களும்
2.2.1 வினாத்தாள் II இன் கட்டமைப்பு 30
2.2.2 வினாத்தாள் II - எதிர்பார்க்கப்பட்ட விடைகள், புள்ளி வழங்கும் திட்டம், விடையளித்தல் தொடர்பான அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள் 31
2.2.3 வினாத்தாள் II இற்கு விடையளித்தல் தொடர்பான முழு அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள் 67

பகுதி III

3 விடையளிக்கும்போது அவதானிக்கப்பட வேண்டிய விடயங்களும் ஆலோசனைகளும்
3.1 விடையளிக்கும்போது அவதானிக்கப்பட வேண்டிய விடயங்கள் 68
3.2 கற்றல் - கற்பித்தல் தொடர்பான கருத்துகளும் ஆலோசனைகளும் 70





Download Past Papers at : www.freebooks.lk

# பகுதி I

## 1 பாடக் குறிக்கோள்களும் பாட அடைவு தொடர்பான தகவல்களும்

### 1.1 பாடக் குறிக்கோள்கள்

இப்பாடத்திட்டத்தினைப் பின்பற்றுவதனால் மாணவர்,

* கணக்கீட்டின் எண்ணக்கரு ரீதியான சட்டகம் தொடர்பிலான அடிப்படை விளக்கத்தினைப் பெற்றுக் கொள்வார்.
* கணக்கியல் நுட்ப முறைகள் தொடர்பில் பெற்ற அடிப்படை அறிவினைப் பயன்படுத்துவார்.
* கணக்கீட்டுப் பாடத்துறையில் வெளிப்படையாகக் காணப்படும் புத்தாக்கங்களை விளங்கிக் கொள்வார்.
* கணக்கீட்டுப் பாடத்துறையின் ஊடாகப் பெற்றுக் கொள்ளும் அறிவினை பல்வேறு தொழில் தேவைகளுக்குப் பயன்படுத்துவார்.
* சமூகப் பொருளாதார சூழலொன்றுக்கு வினைத்திறனாகச் செயற்படக் கூடிய முகாமைத்துவத் திறனைப் பெற்றுக்கொள்வார்.
* பல்வேறுபட்ட வணிக அமைப்புக்களின் கணக்கு வைப்பு தொடர்பிலான திறனைப் பெற்றுக் கொள்வார்.
* பாடத்துறையில் தேடியறிதல்களை மேற்கொள்வதன் மூலம் கிடைக்கும் அனுபவத்தினை எதிர்கால ஆய்வு அபிவிருத்திக் கருமங்களுக்கு பயன்படுத்திக் கொள்வார்.
* வளங்களை ஆக்கபூர்வமாகவும், வினைத்திறனாகவும் பயன்படுத்துவதற்கான தேர்ச்சியினை விருத்தி செய்து கொள்வார்.



Download Past Papers at : www.freebooks.lk

## 1.2 பாட அடைவு தொடர்பான புள்ளிவிபரத் தகவல்கள்

### 1.2.1 இப்பாடத்துக்குத் தோற்றிய பரீட்சார்த்திகளின் எண்ணிக்கை

| மொழிமூலம் | பாடசாலை | தனிப்பட்ட | மொத்தம் |
|---|---|---|---|
| சிங்களம் | 43826 | 5043 | 48869 |
| தமிழ் | 7881 | 1000 | 8881 |
| ஆங்கிலம் | 1774 | 750 | 2524 |
| **மொத்தம்** | **53481** | **6793** | **60274** |

அட்டவணை 1

### 1.2.2 பரீட்சார்த்திகளினால் தரங்கள் பெறப்பட்டுள்ள விதம்

| தரம் | பாடசாலைப் பரீட்சார்த்திகள் | | தனிப்பட்ட பரீட்சார்த்திகள் | | மொத்தம் | சதவீதம் |
|---|---|---|---|---|---|---|
| | எண்ணிக்கை | சதவீதம் | எண்ணிக்கை | சதவீதம் | | |
| A | 8167 | 15.27 | 566 | 8.33 | 8733 | 14.49 |
| B | 6479 | 12.11 | 482 | 7.10 | 6961 | 11.55 |
| C | 11472 | 21.45 | 933 | 13.73 | 12405 | 20.58 |
| S | 13707 | 25.63 | 1688 | 24.85 | 15395 | 25.54 |
| F | 13656 | 25.53 | 3124 | 45.99 | 16780 | 27.84 |
| மொத்தம் | **53481** | **88.73** | **6793** | **11.27** | **60274** | **100** |

அட்டவணை 2

பரீட்சைக்குத் தோற்றிய பாடசாலைப் பரீட்சார்த்திகளில் ஏறக்குறைய 65% ஆனோர் கணக்கீடு பாடத்தில் சித்தியடைந்திருந்தாலும், தனிப்பட்ட பரீட்சார்த்திகளில் ஏறக்குறைய 52% ஆனோர் மாத்திரமே இப்பாடத்தில் சித்தியடைந்துள்ளமையை மேலுள்ள அட்டவணை எமக்குப் புலப்படுத்துகின்றது.



Download Past Papers at : www.freebooks.lk

## 1.2.3 மாவட்ட அடிப்படையில் முதல் முறையாகத் தோற்றிய பாடசாலைப் பரீட்சார்த்திகளால் தரங்கள் பெறப்பட்டுள்ள விதம்

| மாவட்டம் | தோற்றியோரின் எண்ணிக்கை | அதி சிறந்த சித்தி (A) பெற்றவர் | | விசேட திறமைச் சித்தி (B) பெற்றவர் | | திறமைச் சித்தி (C) பெற்றவர் | | சாதாரண சித்தி (S) பெற்றவர் | | சித்தி (A+B+C+S) பெற்றவர் | | சித்தி அடையாதோர் (F) | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % |
| 1. கொழும்பு | 8370 | 1505 | 17.98 | 1064 | 12.71 | 1803 | 21.54 | 2103 | 25.13 | 6475 | 77.36 | 1895 | 22.64 |
| 2. கம்பஹா | 4898 | 682 | 13.92 | 527 | 10.76 | 958 | 19.56 | 1303 | 26.60 | 3470 | 70.85 | 1428 | 29.15 |
| 3. களுத்துறை | 2311 | 428 | 18.52 | 268 | 11.60 | 443 | 19.17 | 552 | 23.89 | 1691 | 73.17 | 620 | 26.83 |
| 4. கண்டி | 2832 | 309 | 10.91 | 255 | 9.00 | 615 | 21.72 | 771 | 27.22 | 1950 | 68.86 | 882 | 31.14 |
| 5. மாத்தளை | 739 | 62 | 8.39 | 61 | 8.25 | 162 | 21.92 | 202 | 27.33 | 487 | 65.9 | 252 | 34.1 |
| 6. நுவரெலியா | 1068 | 106 | 9.93 | 121 | 11.33 | 248 | 23.22 | 291 | 27.25 | 766 | 71.72 | 302 | 28.28 |
| 7. காலி | 2336 | 337 | 14.43 | 280 | 11.99 | 441 | 18.88 | 572 | 24.49 | 1630 | 69.78 | 706 | 30.22 |
| 8. மாத்தறை | 1336 | 211 | 15.79 | 177 | 13.25 | 321 | 24.03 | 306 | 22.90 | 1015 | 75.97 | 321 | 24.03 |
| 9. அம்பாந்தோட்டை | 748 | 93 | 12.43 | 104 | 13.90 | 170 | 22.73 | 179 | 23.93 | 546 | 72.99 | 202 | 27.01 |
| 10. யாழ்ப்பாணம் | 1037 | 174 | 16.78 | 146 | 14.08 | 224 | 21.60 | 235 | 22.66 | 779 | 75.12 | 258 | 24.88 |
| 11. கிளிநொச்சி | 171 | 17 | 9.94 | 17 | 9.94 | 36 | 21.05 | 43 | 25.15 | 113 | 66.08 | 58 | 33.92 |
| 12. மன்னார் | 202 | 27 | 13.37 | 26 | 12.87 | 38 | 18.81 | 50 | 24.75 | 141 | 69.8 | 61 | 30.2 |
| 13. வவுனியா | 276 | 40 | 14.49 | 33 | 11.96 | 61 | 22.10 | 75 | 27.17 | 209 | 75.72 | 67 | 24.28 |
| 14. முல்லைத்தீவு | 126 | 9 | 7.14 | 16 | 12.70 | 20 | 15.87 | 37 | 29.37 | 82 | 65.08 | 44 | 34.92 |
| 15. மட்டக்களப்பு | 716 | 119 | 16.62 | 94 | 13.13 | 162 | 22.63 | 170 | 23.74 | 545 | 76.12 | 171 | 23.88 |
| 16. அம்பாறை | 880 | 106 | 12.05 | 75 | 8.52 | 172 | 19.55 | 261 | 29.66 | 614 | 69.77 | 266 | 30.23 |
| 17. திருகோணமலை | 569 | 64 | 11.25 | 41 | 7.21 | 128 | 22.50 | 152 | 26.71 | 385 | 67.66 | 184 | 32.34 |
| 18. குருநாகல் | 2340 | 261 | 11.15 | 255 | 10.90 | 437 | 18.68 | 606 | 25.90 | 1559 | 66.62 | 781 | 33.38 |
| 19. புத்தளம் | 1210 | 179 | 14.79 | 139 | 11.49 | 255 | 21.07 | 314 | 25.95 | 887 | 73.31 | 323 | 26.69 |
| 20. அனுராதபுரம் | 1092 | 131 | 12.00 | 131 | 12.00 | 194 | 17.77 | 275 | 25.18 | 731 | 66.94 | 361 | 33.06 |
| 21. பொலன்னறுவை | 533 | 48 | 9.01 | 38 | 7.13 | 104 | 19.51 | 155 | 29.08 | 345 | 64.73 | 188 | 35.27 |
| 22. பதுளை | 1336 | 119 | 8.91 | 110 | 8.23 | 243 | 18.19 | 373 | 27.92 | 845 | 63.25 | 491 | 36.75 |
| 23. மொனராகலை | 556 | 68 | 12.23 | 55 | 9.89 | 119 | 21.40 | 132 | 23.74 | 374 | 67.27 | 182 | 32.73 |
| 24. இரத்தினபுரி | 1811 | 306 | 16.90 | 241 | 13.31 | 379 | 20.93 | 442 | 24.41 | 1368 | 75.54 | 443 | 24.46 |
| 25. கேகாலை | 1292 | 187 | 14.47 | 161 | 12.46 | 263 | 20.36 | 328 | 25.39 | 939 | 72.68 | 353 | 27.32 |
| **நாடு முழுவதும்** | **38785** | **5588** | **14.41** | **4435** | **11.43** | **7996** | **20.62** | **9927** | **25.59** | **27946** | **72.05** | **10839** | **27.95** |

**அட்டவணை** 3



Download Past Papers at : www.freebooks.lk

### 1.2.4 வகுப்பாயிடை அடிப்படையில் புள்ளிகள் பெறப்பட்டுள்ள விதம்

| வகுப்பாயிடை | மீடிறன் | மீடிறன் சதவீதம் | திரள் மீடிறன் | திரள் மீடிறன் சதவீதம் |
|---|---|---|---|---|
| 91 - 100 | 565 | 0.94 | 60274 | 100.00 |
| 81 - 90 | 3843 | 24.04 | 59709 | 99.06 |
| 71 - 80 | 6199 | 38.77 | 55866 | 92.69 |
| 61 - 70 | 7519 | 47.03 | 49667 | 82.40 |
| 51 - 60 | 8777 | 54.90 | 42148 | 69.93 |
| 41 - 50 | 10059 | 62.92 | 33371 | 55.37 |
| 31 - 40 | 9761 | 61.05 | 23312 | 38.68 |
| 21 - 30 | 7919 | 49.53 | 13551 | 22.48 |
| 11 - 20 | 4897 | 30.63 | 5632 | 9.34 |
| 01 - 10 | 719 | 4.50 | 735 | 1.22 |
| 00 - 00 | 16 | 0.10 | 16 | 0.33 |

**அட்டவணை 4**

இந்தப் பாடத்திற்குப் பரீட்சார்த்திகள் புள்ளிகள் பெற்ற விதம் வகுப்பாயிடைகளுக்கேற்ப மேலேயுள்ள அட்டவணையில் காட்டப்பட்டுள்ளது.

உதாரணமாக மேலுள்ள அட்டவணையின்படி இப்பாடத்திற்கு தோற்றிய 60274 பேர்களில் 31-40 வகுப்பாயிடையினுள் புள்ளிகள் பெற்றோரின் எண்ணிக்கை 9761 ஆகும். அது வீதத்தில் 16.19% ஆகும். 40 புள்ளிகள் அல்லது அதனிலும் குறைந்த புள்ளிகள் பெற்றோரின் எண்ணிக்கை 23312 ஆக இருந்ததுடன், அதன் வீதம் 38.67% ஆகும்.



Download Past Papers at : www.freebooks.lk

1.3 பாட அடைவு பற்றிய பகுப்பாய்வு

1.3.1 வினாத்தாள் **I** இன் அடைவு




**வரைபு1** (RD/16/05/AL படிவத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது.)

1 ஆம் வினாத்தாளின் ஒவ்வொரு வினாவிற்கும் விண்ணப்பதாரிகள் சரியாக விடையளித்த விதமானது மேலுள்ள வரைபில் காட்டப்பட்டுள்ளது.

உதாரணமாக : மேலுள்ள வரைபிற்கேற்ப விண்ணப்பதாரிகளின் பெரும்பாலானோர் 02 ஆம் வினாவிற்கே சரியாக விடையளித்துள்ளனர். அது 91% ஆகும். வினா இலக்கம் 12 இற்கே குறைந்த தொகையினர் சரியான விடையளித்துள்ளனர். அது 15% ஆகும்.




Download Past Papers at : www.freebooks.lk

### 1.3.2 வினாத்தாள் II இல் வினாக்கள் தெரிவு செய்யப்பட்டுள்ள விதம்




வினாத்தாள் II இல் ஒவ்வொரு வினாக்களும் தெரிவு செய்யப்பட்டுள்ள முறையானது இவ்வரைபின் மூலம் தெளிவுபடுத்தப்படுகின்றது. அதற்கேற்ப கட்டாய வினாவாகிய 1ம் 2ம் வினாக்களுக்கு மிகச் சிறிய தொகையினர் தவிர்ந்த ஏனைய சகல விண்ணப்பதாரர்களும் விடையளித்துள்ளனர் என்பது தெரிய வருகின்றது. ஏனைய வினாக்களில் விண்ணப்பதாரிகளில் கூடுதலானோர் வினாத்தாள் II இன் 3 ஆம் வினாவிற்கு விடையளித்துள்ளதுடன் அதன் அளவு 95% ஆகும். ஏனைய வினாக்களில் விண்ணப்பதாரிகள் குறைவாக தெரிவு செய்துள்ளது 07 ஆம் வினா என்பதுடன் அது 45% ஆகும்.

**வரைபு 2** - (RD/16/02/AL படிவத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது.)

### 1.3.3 வினாத்தாள் II இல் புள்ளிகள் பெறப்பட்டுள்ள விதம்




வினாத்தாள் II இல் ஒவ்வொரு வினாவிற்கும் புள்ளிகள் பெற்றுள்ள முறை இவ்வரைபின் மூலம் தெளிவுபடுத்தப்படுகின்றது. உதாரணமாக 1 ஆம் வினாவிற்கு இங்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகள் 20 ஆகும். அப்புள்ளிகளில் 76%-100% (16-20 புள்ளிகள்) வகுப்பாயிடையில் புள்ளிகள் பெற்ற வீதம் 18% மாத்திரமேயாகும். எனினும் விண்ணப்பதாரிகளில் கூடுதலானோர் அதாவது 31%த்தினர் இவ்வினாவிற்கு 0%-25% (0-5) வரையான வகுப்பாயிடைக்குரிய புள்ளி அளவினையே பெற்றுள்ளனர்.

**வரைபு 3** - (RD/16/02/AL படிவத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது.)



Download Past Papers at : www.freebooks.lk

### 1.3.4 வினாத்தாள் II இன் அடைவு




வரைபு 4 (RD/16/04/AL) படிவத்திலிருந்து பெற்ற தகவல்களின் உதவியுடன் தயாரிக்கப்பட்டுள்ளது.)




Download Past Papers at : www.freebooks.lk

# பகுதி II

## 2 வினாக்களும் அவற்றிற்கு விடையளிக்கப்பட்டமை தொடர்பான விபரங்களும்

### 2.1 வினாத்தாள் I உம் அதற்கு விடையளிக்கப்பட்டுள்ளமை தொடர்பான விபரங்களும்

#### 2.1.1 வினாத்தாள் I இன் கட்டமைப்பு

* நேரம் 02 மணித்தியாலங்களாகும்.
* 30 பல்தேர்வு வினாக்களும், சுருக்க விடையளித்தல் வினாக்கள் 20 உம் காணப்படுகின்றன.
* சகல வினாக்களுக்கும் விடையளித்தல் வேண்டும்.
* ஒரு வினாவிற்கு 02 புள்ளிகள் வீதம் மொத்தப் புள்ளிகள் 100 ஆகும்.
* விடைத்தாள் மதிப்பீட்டின் போது ஒவ்வொரு வினாவிற்கும் 4 புள்ளிகள் வீதம் வழங்கப்படும். அதற்கேற்ப மொத்தப்புள்ளிகள் 200 ஆகும்.
* பக்கம் 25 இல் இறுதிப் புள்ளி மதிப்பிடும் விதம் தொடர்பாக காட்டப்பட்டுள்ளது.



Download Past Papers at : www.freebooks.lk

## 2.1.2 வினாத்தாள் I இன் வினா இல. 1 - 30 வரையான வினாக்கள்

1. பின்வரும் கூற்றுகளில் எது நிறுவனமொன்றின் நிதிக் கணக்கீட்டின் ஆரம்ப தொழிற்பாடு தொடர்பில் **சரியானது** ?
   (1) இது நிறுவனத்தின் கணக்குப் புத்தகங்களில் கொடுக்கல் வாங்கல்களை பண அளவில் பதிகிறது.
   (2) இது நிறுவனத்தின் முகாமையாளர்கள் பயன்படுத்துவதற்கான விசேட நோக்கங்களைக் கொண்ட நிதி அறிக்கைகளைத் தயாரிக்கின்றது.
   (3) இது நிறுவனத்தின் அக்கறையுடையோர் பயன்படுத்துவதற்கான பொது நோக்கங்கள் கொண்ட நிதி அறிக்கைகளைத் தயாரிக்கின்றது.
   (4) இது நிறுவனத்தின் உரிமையாளர்கள் தீர்மானம் எடுப்பதற்காக கடந்தகால மற்றும் எதிர்கால தகவல்களை வழங்குகிறது.
   (5) இது நிறுவனத்தின் வருடாந்த கணக்காய்விற்குத் தேவையான நிதித் தகவல்களை வழங்குகிறது.
   (……)

2. பின்வரும் நடவடிக்கைகள் கணக்கீட்டுச் செயன்முறையில் இடம்பெறும் **சரியான** ஒழுங்குவரிசை யாது ?
   A - கொடுக்கல் வாங்கல்கள் இடம்பெறல்
   B - நாளேட்டுப் பதிவுகளை பேரேட்டுக்கு மாற்றுதல்
   C - கொடுக்கல் வாங்கல்களை ஆரம்பப் பதிவேடுகளில் பதிதல்
   D - பரீட்சைமீதியைத் தயாரித்தல்
   E - பேரேட்டுக் கணக்குகளைச் சமப்படுத்துதல்
   (1) A, B, C, E, D (2) A, C, B, E, D (3) C, A, B, E, D (4) C, B, A D, E (5) C, B, A, E, D (……)

3. பின்வரும் கணக்கீட்டு எண்ணக்கருக்களில் எது வருமானக் கூற்றில் ஒவ்வொரு காலத்திற்குமான பெறுமானத் தேய்வினை இனங்காணுகின்றது ?
   (1) அட்டுறு (2) தொடர்ந்து இயங்குதல் (3) இணைத்தல்
   (4) தேறல் (5) முன்னெச்சரிக்கை
   (……)

4. பின்வரும் கணக்கீட்டு எண்ணக்கருவில் எது வாடிக்கையாளருக்குப் பொருட்களை விநியோகிக்கும் நேரத்தில் அதனை விற்பனை வருவாயாக வருமானக் கூற்றில் இனங்காண்பதற்கான அடிப்படையை வழங்குகிறது ?
   (1) அட்டுறு (2) இணைத்தல் (3) கணக்கீட்டுக் காலம்
   (4) முன்னெச்சரிக்கை (5) தேறல்
   (……)

5. பின்வருவனவற்றுள் எது இலங்கையில் பின்பற்றப்படும் 'நிதி அறிக்கையிடலிற்கான எண்ணக்கரு சட்டவாக்கத்தின்படி' நிதித் தகவல்களின் **அடிப்படை** பண்புசார் குணாதிசயங்களாகக் கருதப்படுகின்றது ?
   (1) பொருத்தப்பாடு மற்றும் உறுதிப்படுத்தும் (மெய்மையாக்கும்) தன்மை
   (2) நம்பகத்தன்மை மற்றும் காலம் தவறாமை
   (3) விளங்கிக் கொள்ளக்கூடிய தன்மை மற்றும் ஒப்பீட்டுத் தன்மை
   (4) ஒப்பீட்டுத் தன்மை மற்றும் உண்மையான பிரதிநிதித்துவம்
   (5) பொருத்தப்பாடு மற்றும் உண்மையான பிரதிநிதித்துவம்
   (……)

6. நிறுவனமொன்று ரூ. 600 000 பட்டியல் விலையில் *5%* வியாபாரக் கழிவுடன் பொருட்களைக் கடனுக்குக் கொள்வனவு செய்து பின்பு அதனை ரூ. 650 000 இற்கு காசுக்கு விற்பனை செய்தது. கடன்கொடுத்தோருக்கான இத் தொகை இன்னமும் கொடுத்துத் தீர்க்கப்படவில்லை. இக்கொடுக்கல் வாங்கல்களின் **தேறிய விளைவு** கணக்கீட்டுச் சமன்பாட்டில் ஏற்படுத்தும் தாக்கம் பின்வருவனவற்றுள் எதனால் காட்டப்படும் ?

| | சொத்துக்கள் | பொறுப்புக்கள் | உரிமையாண்மை |
|---|---|---|---|
| (1) | ரூ. 50 000 அதிகரிப்பு | - | ரூ. 50 000 அதிகரிப்பு |
| (2) | ரூ. 80 000 அதிகரிப்பு | - | ரூ. 80 000 அதிகரிப்பு |
| (3) | ரூ. 80 000 அதிகரிப்பு | ரூ. 570 000 குறைவு | ரூ. 650 000 அதிகரிப்பு |
| (4) | ரூ. 650 000 அதிகரிப்பு | ரூ. 570 000 அதிகரிப்பு | ரூ. 80 000 அதிகரிப்பு |
| (5) | ரூ. 650 000 அதிகரிப்பு | ரூ. 600 000 அதிகரிப்ப | ரூ. 50 000 அதிகரிப்பு |

(……)

7. 31.03.2015 இலுள்ளவாறான தனூஜா PLC இன் கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கின் மீதியானது ரூ. 360 000 ஆகும் அதே நாளில் கடன்கொடுத்தோர் பேரேட்டின்படி கடன்கொடுத்தோர் மீதியினது மொத்தம் ரூ. 406 000 ஆகும். தொடர்ந்து மேற்கொள்ளப்பட்ட பரிசீலனையானது பின்வருவனவற்றை வெளிக்கொணர்ந்தது.
   - தீர்க்கப்படாமல் இருந்த மீதியொன்றிற்கு விநியோகத்தர் ஒருவரால் விதிக்கப்பட்ட ரூ. 10 000 வட்டியானது கடன்கொடுத்தோர் பேரேட்டில் மட்டும் பதியப்பட்டிருந்தது.
   - கொள்வனவு நாளேட்டின் மொத்தம் ரூ. 62 000 ஆனது கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் ரூ. 26 000 ஆகப் பதியப்பட்டிருந்தது.
   - கடன்கொடுத்தோர் ஒருவருக்குச் செலுத்திய ரூ. 28 000 ஆனது கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கிலும் கடன்கொடுத்தோர் பேரேட்டிலும் பதியப்பட்டிருக்கவில்லை.

   31.03.2015 இலுள்ளவாறான கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கின் **சரியான மீதி**:
   (1) ரூ. 358 000 (2) ரூ. 368 000 (3) ரூ. 378 000 (4) ரூ. 404 000 (5) ரூ. 406 000 (……)


Download Past Papers at : www.freebooks.lk

**8.** 31.03.2015 இலுள்ளவாறான சந்திரன் PLC இன் பரீட்சைமீதி சமப்படவில்லை. தொடர்ந்து மேற்கொள்ளப்பட்ட பரிசீலனையானது பின்வருவனவற்றை வெளிக்கொணர்ந்தது.

- காசுக்கு விற்பனை ரூ. 100 000 ஆனது காசுப் புத்தகத்தில் மட்டும் பதியப்பட்டுள்ளது.
- கொள்வனவு நாளேடானது ரூ. 60 000 ஆல் குறைவாகக் கூட்டப்பட்டிருந்தது.
- மீளப்பெற்ற அறவிடமுடியாக்கடன்கள் ரூ. 30 000 செலவாகப் பதியப்பட்டுள்ளது.
- வட்டி வருமானம் ரூ. 10 000 ஆனது வட்டி வருமானக் கணக்கில் இரு தடவைகள் செலவில் பதியப்பட்டுள்ளது.

மேற்கூறிய பிழைகளைத் திருத்துவதற்கு முன்னரான தொங்கல் கணக்கு மீதி:

(1) ரூ. 90 000 வரவு (2) ரூ. 90 000 செலவு (3) ரூ. 130 000 செலவு
(4) ரூ. 150 000 வரவு (5) ரூ. 150 000 செலவு (……)

**9.** பின்வரும் தகவல்கள் கம்பனியொன்றின் 2015 மார்ச் மாதத்திற்கான இருப்பு உருப்படியொன்று தொடர்பானது.

| **திகதி** | **விபரம்** | **தொகை (அலகுகள்)** | **அலகு விலை (ரூ.)** |
|---|---|---|---|
| 01.03.2015 | மீதி | 1 000 | 60 |
| 20.03.2015 | கொள்வனவுகள் | 3 000 | 80 |
| 31.03.2015 | விற்பனைகள் | 2 000 | |

கம்பனியானது இருப்பு விநியோகத்தினை விலையிட 'முதல்-வந்தது முதல்-சென்றது' (FIFO) முறையை பயன்படுத்துகிறது. அலகிற்கான தேறிய தேறக்கூடிய பெறுமதியானது 31.03.2015 இலுள்ளவாறு ரூ. 70 ஆகும்.

இலங்கை கணக்கீட்டு நியமம் (LKAS) 2 (இருப்பு) இன்படி 31.03.2015 இலுள்ளவாறான நிதிநிலைமைக் கூற்றில் காட்டப்படும் சரக்கிருப்பின் கிரயம், அதன் கொண்டுசெல்லும் தொகை ஆகியன பின்வருவனவற்றுள் எவை ?

| | **கிரயம் (ரூ.'000)** | **கொண்டுசெல்லும் தொகை (ரூ.'000)** |
|---|---|---|
| (1) | 140 | 140 |
| (2) | 140 | 160 |
| (3) | 150 | 140 |
| (4) | 160 | 140 |
| (5) | 160 | 160 |

(……)

**10.** LKAS 16 (ஆதனம், பொறி மற்றும் உபகரணங்கள்) இன்படி ஆதனம், பொறி மற்றும் உபகரணங்களை வரைவிலக்கணப்படுத்துவது தொடர்பில் பின்வரும் கூற்றுகளில் எது **சரியானது** /எவை **சரியானவை** ?

A - அவை உருவமுள்ள உருப்படிகள்

B - அவை உற்பத்தி செய்வதற்காக அல்லது சேவைகளை வழங்குவதற்காக அல்லது நிர்வாக நோக்கத்திற்குப் பயன்படுத்துவதற்காக வைத்திருக்கப்படுபவை.

C - அவை ஒரு நிதியாண்டிற்கும் மேலாக பயன்படுத்த எதிர்பார்க்கப்படுகிறது.

(1) A மாத்திரம் (2) A, B மாத்திரம் (3) A, C மாத்திரம்
(4) B, C மாத்திரம் (5) A, B, C ஆகியன எல்லாம். (……)

**11.** பின்வரும் தகவல்கள் பெறுமதி சேர் வரி (VAT) பதிவுசெய்யப்பட்ட வியாபாரமொன்றினால் 31.03.2015 இல் வாங்கப்பட்ட இயந்திரம் தொடர்பானவை.

| | ரூ. |
|---|---|
| VAT உட்பட செலுத்திய விலை | 777 000 |
| துறைமுகத்திலிருந்து வியாபார இடத்திற்குக் கொண்டு வருவதற்கான போக்குவரத்துக் கிரயம் | |
| இதற்கான இடத்தைத் தயார்படுத்துவதற்கான கிரயம் | 120 000 |
| இயந்திரத்திற்கான இடத்தைத் தயார்படுத்தும் கிரயம் | 80 000 |
| திறப்புவிழாச் செலவுகள் | 30 000 |
| இயந்திரத்தின் ஆரம்ப பரிசோதனைக் கிரயம் | 10 000 |

பிரயோகிக்கக்கூடிய பெறுமதி சேர் வரி (VAT) 11% ஆகும்.

LKAS 16 (ஆதனம், பொறி மற்றும் உபகரணங்கள்) இன்படி ஆரம்ப இனங்காணலின்போது இயந்திரத்தின் கிரயம்:

(1) ரூ. 931 530 (2) ரூ. 950 000 (3) ரூ. 971 530 (4) ரூ. 980 000 (5) ரூ. 1 027 000 (……)



Download Past Papers at : www.freebooks.lk

**12.** உற்பத்தி நிறுவனமொன்றின் 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான சம்பளப் பட்டியலிலிருந்து பின்வரும் தகவல்கள் பிரித்தெடுக்கப்பட்டுள்ளன.

| விபரம் | ஊழியர் வகை: உற்பத்தி தொழிலாளர்கள் (ரூ.'000) | உற்பத்தி மேற்பார்வையாளர்கள் (ரூ.'000) |
|---|---|---|
| அடிப்படைச் சம்பளம் | 4 000 | 2 000 |
| ஊக்குவிப்புக் கொடுப்பனவு (பூர்த்தி செய்யப்பட்ட விசேட கட்டளையொன்றிற்கான அலகு வீதத்தின் அடிப்படையில்) | 1 500 | - |
| மேலதிக நேரம் | - | 800 |
| உபகாரக் கொடுப்பனவு (கம்பனியின் இலாபத்தின் அடிப்டையில்) | 200 | 100 |
| **மொத்தச் சம்பளம்** | **5 700** | **2 900** |
| கழிப்பனவுகள்: | | |
| ஊழியர் சேமலாப நிதிப் பங்களிப்பு (10%) | 400 | 200 |
| **தேறிய சம்பளம்** | **5 300** | **2 700** |
| கம்பனி பங்களிப்புகள்: | | |
| ஊழியர் சேமலாப நிதி (15%) | 600 | 300 |
| ஊழியர் நம்பிக்கை நிதி (3%) | 120 | 60 |

கம்பனியின் 31.03.2015 இல் முடிவடையும் ஆண்டுக்கான நேரக் கூலிகள் மற்றும் உற்பத்தி மேந்தலைகளில் உள்ளடக்கப்பட்டுள்ள சம்பளங்கள் ஆகியவற்றின் தொகைகள் எவை ?

| | நேரக் கூலிகள் (ரூ.'000) | உற்பத்தி மேந்தலைகளில் உள்ளடக்கப்பட்ட சம்பளங்கள் (ரூ.'000) |
|---|---|---|
| (1) | 5 300 | 2 700 |
| (2) | 5 500 | 2 800 |
| (3) | 5 700 | 2 900 |
| (4) | 6 220 | 3 160 |
| (5) | 6 420 | 3 260 |

(……)

**13.** பின்வரும் தகவல்கள் விளையாட்டுக் கழகமொன்றின் 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான சந்தாவுடன் தொடர்பானவை. 2014/2015 வருடத்தில் பெற்ற சந்தாவின் விபரம்:

| வருடம் | ரூ. |
|---|---|
| 2013/2014 | 9 000 |
| 2014/2015 | 50 000 |
| 2015/2016 | 20 000 |
| | **79 000** |

| | 31.03.2015 இல் உள்ளபடி (ரூ.) | 31.03.2014 இல் உள்ளபடி (ரூ.) |
|---|---|---|
| வருமதியான சந்தா | 15 000 | 10 000 |
| முற்பணமாகப் பெற்ற சந்தா | ? | 10 000 |

31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கென இனங்காணப்பட்ட சந்தா வருமானத்தின் தொகை எது ?

(1) ரூ. 50 000 (2) ரூ. 74 000 (3) ரூ. 79 000 (4) ரூ. 84 000 (5) ரூ. 94 000 (……)

- **14 ஆம், 15 ஆம் வினாக்களுக்கு விடையளிப்பதற்குக் கீழே தரப்பட்டுள்ள தகவல்களைப் பயன்படுத்துக.**

லறோஜன், நந்தன், ராஜா ஆகியோர் இலாப நட்டங்களை சமமாகப் பகிரும் வியாபாரமொன்றின் பங்காளர்கள். 01.04.2014 இலுள்ளபடியான பங்குடைமையின் மூலதனம் மற்றும் நடைமுறைக் கணக்கு மீதிகள் பின்வருமாறு இருந்தன.

ரூ.'000

| கணக்கு | லறோஜன் | நந்தன் | ராஜா |
|---|---|---|---|
| மூலதனம் | 3 000 | 2 000 | 1 000 |
| நடைமுறை | 600 | 400 | 200 |

31.03.2015 இல் முடிவடைந்த வருடத்தில் பங்குடைமையானது ரூ. 2 700 000 இலாபத்தை ஈட்டியுள்ளது. ஒவ்வொரு பங்காளரும் வருடாந்த சம்பளம் ரூ. 400 000 இற்கும் அவர்களின் ஆரம்ப மூலதன மீதியின் மீது 10% வட்டிக்கும் உரித்துடையவர்.

நடைமுறை வருடத்தில் பங்காளர்களின் பற்றுக்கள்: லறோஜன் ரூ. 60 000, நந்தன் ரூ. 40 000, ராஜா ரூ. 30 000.

ராஜா பங்குடைமையிலிருந்து 31.03.2015 இல் இளைப்பாறினார். இத்தினத்தில் இவரின் நன்மதிப்பின் பங்கானது ரூ. 200 000 ஆக மதிப்பிடப்பட்டுள்ளது. ராஜாவிற்குக் கொடுக்குமதியான தொகை கடன்கணக்கொன்றிற்கு மாற்றப்பட்டது.


Download Past Papers at : www.freebooks.lk

**14.** லஹோஜன், நந்தன் ஆகியோரின் 31.03.2015 இலுள்ளவாறான நடைமுறைக் கணக்கு மீதிகள்:

| | லஹோஜன் (ரூ.'000) | நந்தன் (ரூ.'000) |
|---|---|---|
| (1) | 1 540 | 1 260 |
| (2) | 1 600 | 1 300 |
| (3) | 2 130 | 1 850 |
| (4) | 2 140 | 1 860 |
| (5) | 2 190 | 1 890 |

( )

**15.** 31.03.2015 இலுள்ளவாறான லஹோஜனின் மூலதனக் கணக்கு, ராஜாவின் கடன் கணக்கு மீதிகள்:

| | மூலதனக் கணக்கு - லஹோஜன் (ரூ.'000) | கடன் கணக்கு - ராஜா (ரூ.'000) |
|---|---|---|
| (1) | 2 900 | 1 200 |
| (2) | 2 900 | 2 170 |
| (3) | 2 900 | 2 770 |
| (4) | 3 000 | 1 200 |
| (5) | 3 000 | 2 170 |

(……)

**16.** அகிலன் PLC இன் 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான நிதிக் கூற்றுகள் கம்பனியின் இயக்குனர்களால் 15.05.2015 இல் அதிகாரமளிக்கப்பட்டுள்ளன. கம்பனியின் வருடாந்த பொதுக் கூட்டமானது 30.05.2015 இல் இடம்பெற்றது. பின்வரும் நிகழ்வுகள் 31.03.2015 இற்குப் பின்னர் கம்பனியில் இடம்பெற்றுள்ளன.

A - 31.03.2015 இல் ரூ. 750 000 தரவேண்டிய கடன்பட்டோரொருவர் 20.04.2015 இல் முறிவடைந்தவராக பிரகடனப்படுத்தப்பட்டுள்ளார்.

B - 31.03.2015 இல் ரூ. 800 000 கிரயமுடைய சரக்கிருப்புகள் 30.04.2015 இல் ரூ. 720 000 இற்கு விற்பனை செய்யப்பட்டது.

C - 31.03.2015 இல் கம்பனியின் பொறுப்பொன்றான ரூ. 500 000 இனை உறுதிப்படுத்தி 25.05.2015 இல் நீதிமன்ற வழக்கொன்றின் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

D - 15.05.2015 இல் சாதாரண பங்கொன்றிற்கு ரூ. 3 இறுதிப் பங்கிலாபமாக பிரகடனப்படுத்தப்பட்டது.

கம்பனியின் 31.03.2015 இல் முடிவடையும் நிதிக் கூற்றுகளில் LKAS 10 (அறிக்கையிடல் காலத்திற்கு பின்னரான நிகழ்வுகள்) இன்படி மேலே காணப்படும் எந்த நிகழ்வுகள் சீராக்கம் செய்யப்படல் வேண்டும்.

(1) A, B மாத்திரம் (2) C, D மாத்திரம் (3) A, B, C மாத்திரம்
(4) B, C, D மாத்திரம் (5) A, B, C, D ஆகிய எல்லாம். (……)

**17.** LKAS 37 (ஏற்பாடுகள், நிகழத்தக்க பொறுப்புக்கள் மற்றும் நிகழத்தக்க சொத்துக்கள்) இதற்கமைய கம்பனியொன்றின் நிதி நிலைமைக் கூற்றில் ஏற்பாடாக பின்வருவனவற்றுள் எது இனங்காணப்படும் ?

A - ஐயக்கடனுக்கான ஏற்பாடு

B - ஊழியர்களினால் கோரப்படும் இழப்பீட்டுத் தொகையொன்றுக்கான ஏற்பாடு

C - பெறுமானத்தேய்விற்கான ஏற்பாடு

D - உத்தரவாதக் கோரிக்கைக்கான ஏற்பாடு

(1) A, D ஆகியன மாத்திரம் (2) B, D ஆகியன மாத்திரம் (3) A, B, C ஆகியன மாத்திரம்
(4) B, C, D ஆகியன மாத்திரம் (5) A, B, C, D ஆகியன எல்லாம் (……)

**18.** பின்வருவன கம்பனியொன்றுடன் தொடர்புடைய 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான தகவல்களாகும்.

| விபரம் | ரூ.'000 |
|---|---|
| வருடத்திற்கான இலாபம் | 750 |
| வருடத்திற்கான வருமானவரிக்கான ஏற்பாடு | 50 |
| காரியாலய உபகரண விற்பனை மீதான நட்டம் | 20 |
| செலுத்திய வருமானவரி | 20 |
| காரியாலய உபகரணத்தின் பெறுமானத்தேய்வு | 70 |
| சரக்கிருப்புக்களில் அதிகரிப்பு | 230 |
| வியாபார கடன்தொடுத்தோரில் குறைவு | 120 |

LKAS 7 (காசுப் பாய்ச்சல் கூற்று) இற்கமைய 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான கம்பனியின் செயற்பாட்டு நடவடிக்கைகளிருந்தான தேறிய காசுப் பாய்ச்சல் எவ்வளவு ?

(1) ரூ. 470 000 (2) ரூ. 520 000 (3) ரூ. 540 000 (4) ரூ. 1 170 000 (5) ரூ. 1 220 000 (……)



Download Past Papers at : www.freebooks.lk

● **31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான வரையறுத்த அரவிந்த் பொதுக் கம்பனியுடன் தொடர்புடைய பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 19 ஆம் 20 ஆம் வினாக்களுக்கு விடையளிக்கவும்.**

| **விபரம்** | **ரூ.'000** |
|---|---|
| விற்பனை வருமானம் | 1 000 |
| மோட்டார் வாகனங்களின் மீள் மதிப்பு மிகை | 200 |
| விநியோகத்தர்களிடமிருந்து பெற்ற வியாபாரக் கழிவு | 100 |
| கட்டட விற்பனை மீதான இலாபம் | 300 |
| மொத்தச் செலவு | 500 |

கம்பனியானது 31.03.2014 இல் முடிவடைந்த வருடத்தில் மோட்டார் வாகன மீள் மதிப்பு குறைவு ரூ. 150 000 இனை பதிந்துள்ளதுடன் இது செலவாக இனங்காணப்பட்டுள்ளது.

**19.** கம்பனியால் இனங்காணப்பட்டுள்ள 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான மொத்த வருமானம் மற்றும் ஏனைய முற்றுமடங்கிய வருமானம் என்பன யாவை ?

| | **மொத்த வருமானம் (ரூ.'000)** | **ஏனைய முற்றுமடங்கிய வருமானம் (ரூ.'000)** |
|---|---|---|
| (1) | 1 450 | 50 |
| (2) | 1 500 | 50 |
| (3) | 1 500 | 200 |
| (4) | 1 600 | 50 |
| (5) | 1 600 | 200 |

(……)

**20.** கம்பனியின் 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான மொத்த முற்றுமடங்கிய வருமானம் மற்றும் நிறுத்தி வைத்த வருவாய் என்பன யாவை ?

| | **மொத்த முற்றுமடங்கிய வருமானம் (ரூ.'000)** | **நிறுத்தி வைத்த வருவாய் (ரூ.'000)** |
|---|---|---|
| (1) | 950 | 950 |
| (2) | 1 000 | 800 |
| (3) | 1 000 | 950 |
| (4) | 1 100 | 900 |
| (5) | 1 100 | 1 050 |

(……)

**21.** பின்வரும் தகவல்கள் கம்பனியொன்றிற்குச் சொந்தமான இயந்திரம் ஒன்றுடன் தொடர்பானவையாகும்.

| | |
|---|---|
| கிரயம் (ரூ.'000) | 6 000 |
| 31.03.2014 இல் திரண்ட பெறுமானத்தேய்வு (ரூ.'000) | 2 400 |
| எதிர்பார்க்கப்படும் எஞ்சிய பெறுமதி (ரூ.'000) | 400 |
| எதிர்பார்க்கப்படும் பயன்தரு காலம் (வருடங்கள்) | 14 |

இயந்திரத்தின் இயலளவை பாரியளவில் மேம்படுத்துவதற்கு கம்பனியானது 01.04.2014 இல் ரூ. 1 800 000 செலவு செய்துள்ளது. இதன் காரணமாக எஞ்சியுள்ள பயன்தரு காலமானது 10 வருடத்திற்கு அதிகரித்துள்ளது. எனினும், அதன் எஞ்சிய பெறுமதி மாறாது காணப்பட்டது.

31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான இயந்திரத்தின் பெறுமானத்தேய்வு மற்றும் 31.03.2015 இல் உள்ளவாறான கொண்டுசெல் மீதி என்பன யாவை ?

| | **பெறுமானத்தேய்வு (ரூ.'000)** | **கொண்டுசெல் மீதி (ரூ.'000)** |
|---|---|---|
| (1) | 100 | 4 500 |
| (2) | 100 | 4 900 |
| (3) | 320 | 3 280 |
| (4) | 500 | 4 500 |
| (5) | 500 | 4 900 |

(……)

**22.** பின்வருவனவற்றுள் கம்பனியொன்றின் உயர்வான கடன்பட்டோர் புரள்வு விகிதத்தை வெளிப்படுத்துவது எது ?
(1) இதன் கடன்பட்டோர் துரிதமாகக் கொடுப்பனவுகளைச் செய்கின்றனர்.
(2) இதன் கடன்பட்டோர் துரிதமாகக் கொடுப்பனவுகளைச் செய்வதில்லை.
(3) இதன் விற்பனையின் பெரும்பகுதி கடன் அடிப்படையில் செய்யப்படுகிறது.
(4) இதன் கடன் சேகரிப்புக் காலம் உயர்வானதாகும்.
(5) இதன் விற்பனையானது அதிகரிக்கின்றது. (……)



Download Past Papers at : www.freebooks.lk

**23.** கம்பனியொன்றின் நடைமுறை விகிதம் மற்றும் துரித சொத்துக்கள் விகிதம் என்பன முறையே 1.2 தடவைகள், 0.8 தடவைகள் ஆகும். ஏனைய காரணிகள் மாறாதுள்ள நிலையில் கடனுக்குப் பொருட்களைக் கொள்வனவு செய்தலானது இவ்விரண்டு விகிதங்களிலும் ஏற்படுத்தும் தாக்கம் பின்வருவனவற்றுள் எது ?

| | **நடைமுறை விகிதம்** | **துரித சொத்துக்கள் விகிதம்** |
|---|---|---|
| (1) | அதிகரிப்பு | அதிகரிப்பு |
| (2) | அதிகரிப்பு | குறைவு |
| (3) | குறைவு | குறைவு |
| (4) | குறைவு | அதிகரிப்பு |
| (5) | மாற்றமில்லை | மாற்றமில்லை |

(……)

**24.** உற்பத்திப் பொருளொன்றின் மொத்தக் கிரயமானது பின்வருவனவற்றுள் எவற்றின் கூட்டுத்தொகைக்குச் சமனாகும் ?
(1) நேர்க்கிரயம் மற்றும் உற்பத்தி மேந்தலைகள்
(2) நேர்க்கிரயம் மற்றும் மாறும் மேந்தலைகள்
(3) மூலக்கிரயம் மற்றும் மாறும் மேந்தலைகள்
(4) மூலக்கிரயம் மற்றும் காலக் கிரயம்
(5) மூலக்கிரயம், மாறும் மேந்தலைக் கிரயங்கள் மற்றும் நிலையான மேந்தலைக் கிரயங்கள் (……)

**25.** உருப்படியொன்றின் உற்பத்தித் தொகையானது குறைவடையும்போது அதன் அலகு மாறும் கிரயமானது:
(1) மாறாதிருக்கும்.
(2) நிலையான தொகையொன்றினால் அதிகரிக்கும்.
(3) நிலையான தொகையொன்றினால் குறைவடையும்.
(4) உற்பத்தியுடன் விகிதாசாரத்தில் அதிகரிக்கும்.
(5) உற்பத்தியுடன் விகிதாசாரத்தில் குறைவடையும். (……)

**26.** சிக்கனக் கட்டளைத் தொகை (EOQ) தொடர்பாக பின்வரும் கூற்றுகளில் எது **சரியானது** / எவை **சரியானவை** ?

A - மொத்தக் கட்டளைக் கிரயமானது இடப்பட்ட கட்டளைகளின் எண்ணிக்கையுடன் நேரடியாக மாறுபடுகின்றது.
B - மொத்த இருப்பு வைத்தல் கிரயமானது சராசரி சரக்கிருப்பு மட்டத்துடன் நேரடியாக மாறுபடுகின்றது.
C - கட்டளை அளவு அதிகரிக்கும்போது மொத்த இருப்பு வைத்திருத்தல் கிரயம் குறைவடைவதுடன் மொத்தக் கட்டளைக் கிரயம் அதிகரிக்கின்றது.

(1) A மாத்திரம் (2) B மாத்திரம் (3) A, B மாத்திரம்
(4) A, C மாத்திரம் (5) B, C மாத்திரம் (……)

**27.** பின்வரும் தகவல்கள் கம்பனியொன்றினால் உற்பத்தி செய்யப்படும் உற்பத்திப் பொருள் ஒன்றுடன் தொடர்பானவை.

| | **ரூ.'000** |
|---|---|
| பயன்படுத்திய நேர் மூலப்பொருட்கள் | 240 |
| நேர் கூலிகள் | ? |
| உற்பத்தி மேந்தலைகள் | ? |
| மொத்த உற்பத்திக் கிரயம் | 600 |

நேர் கூலி கிரயத்தின் 80% இனை உற்பத்தி மேந்தலைகளாக உறிஞ்சுதல் கம்பனியின் கொள்கையாகும்.
மொத்த உற்பத்திக் கிரயத்தில் உள்ளடக்கப்பட்டுள்ள நேர்க்கூலிக் கிரயம் யாது ?
(1) ரூ. 72 000 (2) ரூ. 120 000 (3) ரூ. 200 000 (4) ரூ. 360 000 (5) ரூ. 480 000 (……)

**28.** மார்ச் 2015 இல், தளபாடங்களை உற்பத்தி செய்யும் கம்பனியொன்றில் பின்வரும் செலவுகள் ஏற்பட்டுள்ளன.

| | **ரூ.'000** |
|---|---|
| பயன்படுத்திய மூலப்பொருட்கள்: | |
| மரம் | 2 000 |
| ஆணிகள் | 100 |
| வர்ணப்பூச்சு சாயம் | 400 |
| கூலிகள்: | |
| மரவேலைத் தொழிலாளி | 800 |
| உற்பத்தி மேற்பார்வையாளர் | 400 |
| இயந்திர பெறுமானத்தேய்வு | 300 |
| விற்பனைத் தரகு | 200 |
| நிர்வாக ஊழியர் சம்பளங்கள் | 300 |

2015 மார்ச் மாதத்திற்கான உற்பத்திக் கிரயம் மற்றும் காலக்கிரயம்:

| | **உற்பத்திக் கிரயம் (ரூ.'000)** | **காலக்கிரயம் (ரூ.'000)** |
|---|---|---|
| (1) | 2 500 | 2 000 |
| (2) | 2 800 | 1 700 |
| (3) | 3 300 | 1 200 |
| (4) | 3 700 | 800 |
| (5) | 4 000 | 500 |

(……)


Download Past Papers at : www.freebooks.lk

**29.** பின்வரும் தகவல்கள் கம்பனியொன்றினால் உற்பத்தி செய்யப்படும் உற்பத்திப் பொருள் ஒன்றுடன் தொடர்பானவை.

| | **ரூ.'000** |
|---|---|
| விற்பனைகள் | 1 200 |
| மாறும் கிரயங்கள் | (600) |
| பங்களிப்பு | **600** |
| நிலையான கிரயம் | (240) |
| இலாபம் | **360** |

தற்போதுள்ள செயற்பாட்டு மட்டத்தில் சமப்பாட்டுப் புள்ளி (ரூபாவில்) மற்றும் பாதுகாப்பு எல்லை (ரூபாவில்):

| | **சமப்பாட்டுப் புள்ளி (ரூ.'000)** | **பாதுகாப்பு எல்லை (ரூ.'000)** |
|---|---|---|
| (1) | 120 | 1 080 |
| (2) | 180 | 1 020 |
| (3) | 480 | 720 |
| (4) | 600 | 600 |
| (5) | 800 | 400 |

(……)

**30.** கம்பனியொன்று உற்பத்தியில் பயன்படுத்திய அதன் பழைய இயந்திரமொன்றிற்குப் பதிலாக புதிய இயந்திரமொன்றினைக் கொள்வனவு செய்ய விரும்புகிறது. பழைய இயந்திரத்தினதும் புதிய இயந்திரத்தினதும் பயன்தரு பாவனைக்காலம் தனித்தனியே 4 வருடங்களாகும். பின்வரும் தகவல்களும் கிடைக்கப்பெற்றுள்ளன.

| **விபரம்** | **பழைய இயந்திரம் (ரூ.'000)** | **புதிய இயந்திரம் (ரூ.'000)** |
|---|---|---|
| கொள்வனவு விலை | 9 000 | 10 000 |
| நடைமுறை அகற்றல் பெறுமதி | 4 000 | – |
| 4 ஆவது வருட இறுதியில் எதிர்பார்க்கப்பட்ட எஞ்சிய பெறுமதி | – | 2 000 |
| வருடாந்த செயற்பாட்டுக் கிரயம் (பெறுமானத்தேய்வு நீங்கலாக) | 4 500 | 3 000 |

புதிய இயந்திரம் வாங்கப்படுமாயின் ஆரம்ப தேறிய காசு வெளிப்பாய்ச்சல் மற்றும் 4 ஆம் வருடத்தில் காசு உட்பாய்ச்சல்:

| | **ஆரம்ப தேறிய காசு வெளிப்பாய்ச்சல் (ரூ.'000)** | **4 ஆம் வருடத்தில் காசு உட்பாய்ச்சல் (ரூ.'000)** |
|---|---|---|
| (1) | 5 000 | 3 500 |
| (2) | 6 000 | 1 500 |
| (3) | 6 000 | 3 500 |
| (4) | 10 000 | 1 500 |
| (5) | 10 000 | 3 500 |

(……)


Download Past Papers at : www.freebooks.lk

**2.1.3** **வினாத்தாள் I இல் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளி வழங்கும் திட்டமும்**

| வினா இலக்கம் | விடை | வினா இலக்கம் | விடை |
|---|---|---|---|
| 01. | 3 | 16. | 1 |
| 02. | 2 | 17. | 2 |
| 03. | 3 | 18. | 2 |
| 04. | 5 | 19. | 2 |
| 05. | 5 | 20. | 3 |
| 06. | 4 | 21. | 5 |
| 07. | 3 | 22. | 1 |
| 08. | 5 | 23. | 3 |
| 09. | 4 | 24. | 5 |
| 10. | 5 | 25. | 1 |
| 11. | 2 | 26. | 3 |
| 12. | 4 | 27. | 3 |
| 13. | 2 | 28. | 5 |
| 14. | 1 | 29. | 3 |
| 15. | 2 | 30. | 3 |

**சரியான ஒரு விடைக்கு 04 புள்ளி வீதம் மொத்தம் 120 புள்ளிகள்**



Download Past Papers at : www.freebooks.lk

## 2.1.4 வினாத்தாள் I இல் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளி வழங்கும் திட்டமும்

**31.** பின்வரும் கூற்றுகள் நிறுவனமொன்றின் முகாமைக் கணக்கீட்டுடன் தொடர்புடையதாயின் **சரி** எனவும் தொடர்பற்றதாயின் **பிழை** எனவும் குறிப்பிடவும்.

| | **கூற்றுகள்** | **சரி/பிழை** |
|---|---|---|
| A - | இது நிறுவன முகாமையாளர்கள் தீர்மானங்கள் எடுப்பதற்கான தகவல்களை வழங்குகின்றது. | :………………………… |
| B - | இது நிறுவனம் பற்றிய கடந்த கால, எதிர்காலத் தகவல்களை வழங்குகின்றது. | :………………………… |
| C - | இது கணக்கீட்டு நியமங்களில் விபரிக்கப்பட்ட தகவல்களை வழங்குகின்றது. | :………………………… |
| D - | இது நிறுவனத்தின் மீது அக்கறை கொண்ட அனைத்து தரப்பினருக்கும், அவர்களால் வேண்டப்படும் தகவல்களை வழங்குகின்றது. | :………………………… |

**விடை**

31. A - சரி (01)
 B - சரி (01)
 C - பிழை (01)
 D - பிழை (01)

**32.** குமுது என்பவர் 01.04.2014 இல் ரூ. 500 000 ஐ காசாக முதலிட்டு வியாபாரமொன்றை ஆரம்பித்தார். இவ்வருடத்தில், குமுது வியாபாரத்திற்காக ரூ. 200 000 பெறுமதியான பிரதிபண்ணும் இயந்திரத்தை வழங்கியுள்ளதுடன் ரூ. 50 000 ஐ வியாபாரத்திலிருந்து பற்றாக எடுத்திருந்தார். இவ் வியாபாரமானது 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்தில் ரூ. 120 000 ஐ இலாபமாக உழைத்துள்ளது.

(அ) 31.03.2015 இல் இவ் வியாபாரத்தின் உரிமையாண்மையை அதிகரிப்பதற்குப் பங்களிப்புச் செய்யும் **இரு** உருப்படிகளை (பெறுமதியுடன்) குறிப்பிடுக:

1. ……………………………………………….. 2. ……………………………………………………

(ஆ) 31.03.2015 இல் வியாபாரத்தின் தேறிய சொத்துக்கள் யாவை ? ரூ. ……………………………………………

**விடை**

32. (அ) * பிரதிபண்ணும் இயந்திரம் ரூ .200 000 (01)
 * இலாபம் ரூ. 120 000 (01)

 (ஆ) ரூ. 770 000 (02)

**33.** கீழே தரப்பட்டுள்ள ஆரம்ப பதிவுப் புத்தகங்களுக்குத் தேவையான மூல ஆவணங்களைக் குறிப்பிடுக.

| | **ஆரம்ப பதிவுப் புத்தகம்** | **மூல ஆவணம்** |
|---|---|---|
| A - | விற்பனை நாளேடு | :……………………………………… |
| B - | பொது நாளேடு | :……………………………………… |
| C - | காசுக் கொடுப்பனவு நாளேடு | :……………………………………… |
| D - | கொள்வனவு திரும்பல் நாளேடு | :……………………………………… |

**விடை**

33. A - விற்பனைப் பட்டியல் (01)
 B - பொது நாளேட்டு கைச்சாத்து / உறுதிச்சீட்டு (01)
 C - வவுச்சர் / கைச்சாத்து / உறுதிச்சீட்டு (01)
 D - வரவுத்தாள் (01)



Download Past Papers at : www.freebooks.lk

**34.** ஆதனம், பொறி மற்றும் உபகரணங்கள் ஆகியன தொடர்பாக வியாபாரமொன்றின் பொது நாளேட்டில் பதிவிடக்கூடிய **நான்கு** வகை கொடுக்கல்வாங்கல்கள் அல்லது நிகழ்வுகளைக் குறிப்பிடுக.

1. ..............................................................................................................................................
2. ..............................................................................................................................................
3. ..............................................................................................................................................
4. ..............................................................................................................................................

**விடை**

34. 1. ஆதனம் பொறி கடனுக்கு கொள்வனவு செய்தல்
 2. ஆதனம் பொறி கடனுக்கு விற்பனை செய்தல்
 3. ஆதனம் பொறி மீள் மதிப்பீடு செய்தல் — எந்தவொரு உருப்படிக்கும் 01 புள்ளி
 4. ஆதனம் பொறி பெறுமானத் தேய்வு — வீதம் (04) புள்ளிகள்
 5. ஆதனம் பொறி அகற்றல்
 6. ஆதனம் பொறி பரிமாற்றல்

**35.** நிறுவனமொன்றின் 31.03.2015 இலுள்ளவாறான வங்கிக் கணக்கு மீதியானது அதன் வங்கிக் கூற்றில் காணப்பட்ட மீதியை விட அதிகமாகக் காணப்பட்டது. (நிறுவனத்தின் வங்கிக் கணக்கில் அல்லது அதன் வங்கிக் கூற்றில் எதுவித வழுக்களும் இல்லை எனக் கருதுக.)

இவ் வேறுபாட்டுக்கான **இரண்டு** சாத்தியமான காரணங்களைக் குறிப்பிடுக.

1. ..............................................................................................................................................
2. ..............................................................................................................................................

**விடை**

35. 1. வசூலிக்கப்படாத காசோலை
 2. மறுக்கப்பட்ட காசோலை — எந்தவொரு உருப்படிக்கும்
 3. வங்கி அறவீடுகள் — 02 புள்ளிகள் வீதம் (04) புள்ளிகள்
 4. நிலையான கட்டளைக் கொடுப்பனவுகள்

**36.** பின்வரும் அம்சங்களின் அடிப்படையில் இலாப நோக்கற்ற நிறுவனமொன்றின் கொள்ளல் கொடுத்தல் கணக்கிற்கும் வருமானச் செலவுக் கணக்கிற்கும் இடையிலான வேறுபாடுகளைக் குறிப்பிடுக.

| அம்சம் | கொள்ளல் கொடுத்தல் கணக்கு | வருமானச் செலவுக் கணக்கு |
|---|---|---|
| (அ) தயாரிப்பதன் நோக்கம் | ......................................... | ......................................... |
| (ஆ) தயாரிப்பதன் அடிப்படை | ......................................... | ......................................... |

**விடை**

| 36. | **கொள்ளல் கொடுத்தல் கணக்கு** | **வருமான செலவுக் கணக்கு** |
|---|---|---|
| (அ) | தயாரிப்பதன் நோக்கம் / (01) காசு மீதியை அறிதல் | வரவிலும் கூடிய செலவு/ (01) செலவிலும் கூடிய வரவு |
| (ஆ) | தயாரிப்பதன் அடிப்படைகாசு அடிப்படை (01) | அட்டுறு அடிப்படை (01) |



Download Past Papers at : www.freebooks.lk

**37.** வரையறுத்த அகமது பொதுக் கம்பனியின் முற்றுமடங்கிய வருமானக் கூற்றில் A, B, C, D ஆகிய எழுத்துக்களால் குறிக்கப்பட்டுள்ள பின்வரும் தகவல்களைச் சமர்ப்பிப்பதில் பிரயோகிக்கக்கூடிய கணக்கீட்டு எண்ணக்கருக்களைக் குறிப்பிடுக.

வரையறுத்த அகமது பொதுக் கம்பனி ………………………………………………………A

31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான முற்றுமடங்கிய வருமானக் கூற்று ……………………… B

ரூ.' 000 ……………………………………………… C

| | | |
|---|---|---|
| விற்பனை வருமானம் | XXX | } ……………………………………… D |
| விற்பனைக் கிரயம் | (XXX) | |

**கணக்கீட்டு எண்ணக்கரு**

A - ……………………………………………………………

B - ……………………………………………………………

C - ……………………………………………………………

D - ……………………………………………………………

**விடை**

37. A - தொழில் முழுமைக்கூற்று எண்ணக்கரு (01)
 B - கால எண்ணக்கரு / ஆவர்த்தனம (01)
 C - பண அளவீட்டு எண்ணக்கரு (01)
 D - இணைத்தல் எண்ணக்கரு (01)

**38.** இலங்கையில் பின்பற்றப்படும் 'நிதி அறிக்கையிடலுக்கான எண்ணக்கரு சட்டகத்தின்படி' பொறுப்பொன்றினது **மூன்று** குணாதிசயங்களைக் குறிப்பிடுக.

1. ……………………………………………………………………………………………………………………

2. ……………………………………………………………………………………………………………………

3. ……………………………………………………………………………………………………………………

**விடை**

38. 1. தற்கால கடப்பாட்டிற்குட்பட்டது
 2. எதிர்கால பொருளாதார வள வெளிப்பாய்ச்சல் ஏற்படுத்தக் கூடியது
 3. கடந்த கால கொடுக்கல் வாங்கல்களால் ஏற்பட்டதுட
 4. பணத்தால் அளவிடப்படக் கூடியது (04)

**39.** பின்வருவன 01.04.2014 இல் ஆரம்பிக்கப்பட்ட பாடசாலை பைகளை உற்பத்திசெய்யும் சுதாவின் வியாபாரம் தொடர்பான தகவல்களாகும்.

| **விபரம்** | **ரூ.'000** |
|---|---|
| மூலப்பொருள் கொள்வனவுகள் | 500 |
| நேரக் கூலிகள் | 200 |
| 31.03.2015 இல் மூலப்பொருள் இருப்பு | 100 |
| 31.03.2015 இல் நடைமுறை வேலை இருப்பு (மூலக் கிரயத்தில் பெறுமதியிடப்பட்டுள்ளது.) | 150 |
| உற்பத்தி மேந்தலைகள் | 450 |

31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கு பின்வருவனவற்றைக் கணிப்பிடுக:

(அ) மூலக்கிரயம் ரூ. ………………………  (ஆ) உற்பத்திக் கிரயம் ரூ. ………………………

**விடை**

39. (அ) ரூபா 450 000 (02)
 (ஆ) ரூபா 900 000 (02)



Download Past Papers at : www.freebooks.lk

**40.** பங்குடைமையின் நிதி நிலைமைக் கூற்றில் உரிமையாண்மையின்கீழ் காட்டப்படும் **இரண்டு** விடயங்களைக் குறிப்பிடுக.

1. ……………………………………………………… 2. ………………………………………………………

**விடை**

40. 1. பங்காளர் மூலதன கணக்கு (02)
2. பங்காளர் நடைமுறைக் கணக்கு (02)

**41.** பின்வரும் தகவல்கள் இலாப அல்லது நட்டத்தைச் சமமாகப் பகிரும் அன்ரன், குமார் ஆகியோரின் பங்குடைமையுடன் தொடர்பானவையாகும்.

**நடைமுறைக் கணக்கு மீதிகள்:**

| | 31.03.2015 இல் (ரூ.'000) | 31.03.2014 இல் (ரூ.'000) |
|---|---|---|
| அன்ரன் | 750 | 500 |
| குமார் | 450 | 300 |

பங்குடைமை ஒப்பந்தத்தின்படி அன்ரன் வருடாந்த சம்பளமாக ரூ. 150 000 ஐப் பெறுவதற்கு உரித்துடையவர். இவ்வருடத்தில் அன்ரன், குமார் ஆகியோர் முறையே ரூ. 100 000, ரூ. 50 000 ஐ காசாகப் பற்றியிருந்தனர்.

பின்வருவனவற்றைக் கணிப்பிடுக:

(அ) 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான பங்குடைமையின் இலாபம் ரூ. ………………………………

(ஆ) 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான அன்ரன், குமார் ஆகியோரின் இலாபப் பங்கு:

அன்ரன் ரூ. ……………………………… குமார் ரூ. ………………………………

**விடை**

41. (அ) ரூபா 550 000 (02)
(ஆ) ரூபா 200 000 (01) ரூபா 200 000 (01)

**42.** கம்பனியொன்று 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்தில் பங்கொன்று ரூ. 20 இற்கு 200 000 சாதாரண பங்குகளை வழங்கியது. 300 000 பங்குகளுக்கான விண்ணப்பங்கள் முழுப் பணத்துடன் பெறப்பட்டன. கம்பனிக்கு பங்கு வழங்கல் செலவாக ரூ. 50 000 ஏற்பட்டுள்ளது. இக் கம்பனியானது 200 000 பங்குகளை விகிதாசார முறையில் ஒதுக்கீடு செய்துள்ளதுடன் மேலதிக பணத்தினை விண்ணப்பதாரர்களுக்குத் திருப்பியனுப்பியது.

பின்வருவனவற்றைக் குறிப்பிடுக.

(அ) பங்குகளின் ஒதுக்கீட்டைப் பதிவதற்கான நாட்குறிப்புப் பதிவு *(விளம்பல் அவசியமில்லை.)*

………………………………………………………………………………………

………………………………………………………………………………………

(ஆ) மேலே கூறப்பட்ட கொடுக்கல் வாங்கல் காரணமாக இவ்வருடத்தில் உரிமையாண்மையில் ஏற்பட்ட **தேறிய அதிகரிப்பு** ரூ. ………………………

**விடை**

42. (அ) பங்கு வழங்கற் கணக்கு - வரவு ரூ. 4 000 000
கூறப்பட்ட சா. பங்கு மூலதனக் கணக்கு செலவு - ரூ. 4 000 000 (02)

(ஆ) ரூபா 3 950 000 (02)



Download Past Papers at : www.freebooks.lk

**43.** பொருத்தமான நிரல்களின் கீழ் '√' எனக் குறிடுவதன் மூலம் உற்பத்திக் கம்பனியொன்றின் பின்வரும் கொடுக்கல் வாங்கல்களிலிருந்தான காசுப் பாய்ச்சல்களை LKAS 7 (காசுப் பாய்ச்சல் கூற்று) இன்படி அவை செயற்பாட்டு, மூலதன அல்லது நிதி நடவடிக்கைகளிருந்தான காசுப் பாய்ச்சல்கள் என வகைப்படுத்துக.

| கொடுக்கல் வாங்கல் | நடவடிக்கைகள்: செயற்பாடு | முதலீடு | நிதியிடல் |
|---|---|---|---|
| A - சாதாரண பங்கு வழங்கலிலிருந்து பெற்ற காசு | :............... | .................. | .................. |
| B - வியாபார கடன்பட்டோரிடமிருந்து பெற்ற காசு | :............... | .................. | .................. |
| C - மோட்டார் வாகன விற்பனையிலிருந்து பெற்ற காசு | :............... | .................. | .................. |
| D - நிலையான வைப்பிலிருந்து பெற்ற வட்டி | :............... | .................. | .................. |

**விடை**

| 43. | செயற்பாட்டு | முதலீட்டு | நிதியிடல் | |
|---|---|---|---|---|
| A | - | - | √ | (01) |
| B | √ | - | - | (01) |
| C | - | √ | - | (01) |
| D | - | √ | - | (01) |

**44.** LKAS 8 (கணக்கீட்டுக் கொள்கைகள், கணக்கீட்டு மதிப்பீடுகள் மற்றும் வழுக்களில் ஏற்படும் மாற்றங்கள்) இன்படி பின்வரும் நிலைமைகள் கணக்கீட்டு மதிப்பீடுகளின் மாற்றமொன்றினைப் பிரதிநிதித்துவப்படுமா என்பதைக் குறிப்பிடுக.

| நிலைமைகள் | கணக்கீட்டு மதிப்பீடுகளில் மாற்றம் (ஆம் / இல்லை) |
|---|---|
| A - ஆரம்ப சரக்கிருப்பினை கூட்டிக்காட்டியதன் காரணமாக இலாபத்தில் ஏற்படும் மாற்றம் | :.................................. |
| B - வருட இறுதியிலுள்ள கடன்பட்டோர் மீதிகளுக்கு ஐயக்கடன் ஏற்பாட்டினை செய்வதற்கான வீதத்தில் மாற்றம் | :.................................. |
| C - சரக்கிருப்பு மதிப்பீட்டு முறையானது 'முதல்-வந்தது முதல்-சென்றது' என்ற முறையிலிருந்து நிறையிட்ட சராசரி முறைக்கு மாற்றம் | :.................................. |
| D - கட்டடமொன்றின் எதிர்பார்க்கப்பட்ட பயன்தரு ஆயுட்காலம் 30 இலிருந்து 35 வருடங்களுக்கு மாற்றம் | :.................................. |

**விடை**

44. A - இல்லை (01)

B - ஆம் (01)

C - இல்லை (01)

D - ஆம் (01)



Download Past Papers at : www.freebooks.lk

● **45 ஆம், 46 ஆம் வினாக்களுக்கு விடையளிப்பதற்காக கம்பனியொன்றுடன் தொடர்புடைய பின்வரும் தகவல்களைப் பயன்படுத்துக.**

| **விபரங்கள்** | **ரூ.'000** |
|---|---|
| 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கானது: | |
| இலாபம் | 500 |
| வட்டிச் செலவு | 150 |
| வருமானவரிச் செலவு | 100 |
| சாதாரண பங்குகளுக்குச் செலுத்திய இடைக்காலப் பங்கிலாபம் | 300 |
| 31.03.2015 இல் கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | 1 800 |
| 01.04.2014 இல் நிறுத்திவைத்த வருவாய் | 2 500 |
| 31.03.2015 இல் மொத்தச் சொத்துக்கள் | 7 500 |

**45.** பின்வருவனவற்றைக் கணிப்பிடுக:

(அ) வட்டிக்காப்பு விகிதம் (தடவைகள்) :................................

(ஆ) மொத்தச் சொத்துக்கள் மீதான திரும்பல் விகிதம் - வருட இறுதி சொத்துக்களின் அடிப்படையில் (%)

:................................

**விடை**

45. (அ) 5 தடவை (02) (ஆ) 10% (02)

**46.** பின்வருவனவற்றைக் கணிப்பிடுக:

(அ) 31.03.2015 இல் உரிமையாண்மை ரூ. ..................................(ஆ) கடன் விகிதம் (%) ..........................

**விடை**

46. (அ) ரூபா 4 500 000 (02) (ஆ) 40% (02)

**47.** பின்வரும் தகவல்கள் கம்பனியொன்றின் உற்பத்திப் பொருள் **'P'** உடன் தொடர்புடையனவாகும்.

| | |
|---|---|
| சிக்கனக் கட்டளைத் தொகை (EOQ) | 200 அலகுகள் |
| வருடாந்தக் கேள்வி | 8 000 அலகுகள் |
| கட்டளைக் கிரயம் | கட்டளை ஒன்றிற்கு ரூ. 250 |
| இருப்பு வைத்திருத்தற் கிரயம் | அலகு ஒன்றிற்கு ரூ. 100 |

பின்வருவனவற்றைக் கணிப்பிடுக:

(அ) மொத்தக் கட்டளைக் கிரயம் ரூ. .............. . (ஆ) மொத்த இருப்பு வைத்திருத்தற் கிரயம் ரூ. ...........

**விடை**

47. (அ) ரூபா10 000 (02) (ஆ) ரூபா 10 000 (02)



Download Past Papers at : www.freebooks.lk

**48.** ஆடைத் தொழிற்சாலையொன்றின் இயந்திரத்தை இயக்குபவர் ஒருவருக்கு மணித்தியாலமொன்றுக்கு ரூ. 50 செலுத்தப்படுவதுடன் மேலதிக நேர மணித்தியாலமொன்றுக்கு ரூ. 60 வீதம் செலுத்தப்படுகிறது. வாரமொன்றுக்கான சாதாரண வேலை மணித்தியாலங்கள் 40 ஆகும். இந்த இயந்திர இயக்குபவர் 2015 மார்ச் மாதத்தின் முதல் வாரத்தில் 45 மணித்தியாலங்கள் வேலை செய்துள்ளார்.

பின்வருவனவற்றைக் கணிக்குக:

(அ) இயந்திரத்தை இயக்குவிப்பவரின் 2015 மார்ச் மாதத்தின் முதல் வாரத்துக்கான மொத்தக் கூலி

ரூ. ……………………

(ஆ) இயந்திரத்தை இயக்குபவரின் கூலிகளுள் உள்ளடக்கப்பட்டுள்ள நேர் ஊழியக் கிரயம் ரூ. ……………………

**விடை**

48. (அ) ரூபா 2 300 (02) (ஆ) ரூபா 2 250 (02) /2 300 / 2 000

**49.** பின்வரும் தகவல்கள் தனிப்பொருள் ஒன்றை உற்பத்தி செய்யும் கம்பனியொன்றுடன் தொடர்பானவை.

**அலகொன்றுக்கான மாறும் கிரயம்:**

| | |
|---|---|
| விற்பனை மற்றும் நிர்வாகம் | ரூ. 20 |
| உற்பத்தி | ரூ. 40 |

**நிலையான கிரயங்கள்:**

| | |
|---|---|
| விற்பனை மற்றும் நிர்வாகம் | ரூ. 120 000 |
| உற்பத்தி | ரூ. 150 000 |

கம்பனியானது 5 000 அலகுகளை உற்பத்திசெய்து விற்பனை செய்துள்ளதுடன் இச்செயற்பாட்டு மட்டத்தில் ரூ. 180 000 இலாபமும் ஈட்டியுள்ளது.

பின்வருவனவற்றைக் கணிக்குக:

(அ) அலகொன்றுக்கான பங்களிப்பு ரூ. …………… (ஆ) அலகொன்றுக்கான விற்பனை விலை ரூ. ……………

**விடை**

49. (அ) ரூபா 90 (02) (ஆ) ரூபா 150 (02)

**50.** கம்பனியொன்று புதிய இயந்திரமொன்றை ரூ. 1 000 000 இற்கு 5 வருட பயன்தரு ஆயுட்காலத்துடனும் ரூ. 300 000 எஞ்சிய பெறுமதியுடனும் கொள்வனவு செய்யத் திட்டமிடுகிறது. இவ்வியந்திரத்திலிருந்து வருடாந்த இலாபமாக ஒவ்வொரு வருடமும் ரூ. 110 000 பெறமுடியுமென எதிர்பார்க்கப்படுகிறது. மேலும் இவ்வியந்திரத்திலிருந்தான காசுப் பாய்ச்சல்கள் அதன் ஆயுட்காலம் முழுவதும் ஒரேயளவாக ஏற்படும் என எதிர்பார்க்கப்படுகிறது.

இச்செயற் திட்டத்திற்குரிய பின்வருவனவற்றைக் கணிக்குக:

(அ) 5ஆம் வருடத்திற்கான தேறிய காசுப் பாய்ச்சல் ரூ. ……………………

(ஆ) திரும்பப் பெறும் காலம் (வருடங்கள்) ……………………

**விடை**

50. (அ) ரூபா 550 000 (02) (ஆ) 04 வருடம் (02)

❋❋❋



Download Past Papers at : www.freebooks.lk

**2.1.5 வினாத்தாள் I இற்கு விடையளிக்கப்பட்டுள்ள விதம் பற்றிய முழுமையான அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள்**

**வினாத்தாள் I இற்கான விடையளித்தல் தொடர்பான அவதானிப்பு**




* நிதிக்கணக்கீடு தொடர்பிலான அடிப்படை அறிவினையும் விளக்கத்தையும் பரீட்சிப்பதற்காக உள்ளடக்கப்பட்டிருந்த வினா இலக்கங்களான 1, 2, 6, 31, 33 போன்ற வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளில் 75% த்திற்கும் மேற்பட்ட வீதத்தினர் சரியாக விடையளித்துள்ளமை மேலுள்ள வரைபின் மூலம் விளங்குகின்றது.

* அதேபோன்று பங்குடமை வணிகம், காசுப்பாய்ச்சல் கூற்று, ஊழியக் கிரயம் என்பவற்றுடன் இணைந்ததாக அடிப்படை விடயங்களை உள்ளடக்கியிருந்த வினா இலக்கம் 40, 43, 48 ம் வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளில் ஏறக்குறைய 75% த்தினர் சரியாக விடையளித்துள்ளனர்.

* வினா இலக்கம் 08, 12, 19, 23, 45, 46, 47, 50 போன்ற வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளில் 30% த்தினர் அல்லது அதைவிடக் குறைந்த பிரிவினரே சரியாக விடையளித்துள்ளனர். இதன் மூலம் வழுக்களைத் திருத்துதல், சம்பள அட்டவணை (ஊழியக் கிரயம்) கம்பனியொன்றின் மொத்த வருமானம் மற்றும் விரிவான வருமானம், விகிதங்கள், பொருளாதாரக் கட்டளை அளவு, முதலீட்டினை மதிப்பீடு செய்யும் நுட்பமுறைகள் என்பன தொடர்பிலான அறிவானது போதுமான அளவில் இல்லையெனத் தெரிகின்றது. இதற்கமைய மேற்குறிப்பிட்ட பாட விடயங்களை செயற்பாட்டு ரீதியான உதாரணங்களுடன் முன்வைக்கக்கூடியவாறு கற்றல் - கற்பித்தல் முறை திட்டமிப்படல் வேண்டும்.

* வினா இலக்கம் 3, 11, 17, 18, 20, 21, 22, 25, 26, 27, 30, 42, 49 போன்ற வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளில் 30%-50% திற்குமிடையிலேயே சரியாக விடையளித்துள்ளனர். இவ்வினாக்களின் மூலம் கணக்கீட்டு எண்ணக்கருக்கள், LKAS 8, LKAS 37, LKAS 7 (காசுப்பாய்ச்சல் கூற்று) மொத்த விரிவான வருமானம் நிதிக் கணக்கீட்டு விகிதங்கள், கிரய வகைப்படுத்தல், பொருளாதாரக் கட்டளை அளவின் மாதிரி, முதலீட்டினை மதிப்பிடும் நுட்பமுறைகள், கம்பனியொன்றின் பங்கு வழங்கல், எல்லைக் கிரயவியல் என்பவை தொடர்பிலான அறிவினையும் விளக்கத்தையும் பரீட்சிப்பதற்கு முயற்சி எடுக்கப்பட்டுள்ளது.

* கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளின்போது மேற்குறிப்பிட்ட பாடப்பகுதிகள் தொடர்பில் கூடுதலாகக் கவனம் செலுத்தி நடைமுறை மட்டத்திலான தேர்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு உரிய பிரச்சினைகளும் அதற்கான விடைகளும் கலந்துரையாடப்படுமாயின் மாணவர்களுக்கு அது மிக நன்மைப் பயக்கக் கூடியதாக அமையலாம்.



Download Past Papers at : www.freebooks.lk

**2.1.6 வினாத்தாள் I இல் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்குரிய விடைத் தெரிவுக்கான துலங்கல்கள் (சதவீதத்தில்)**

| வினா இலக்கம் | சரியான தெரிவு | ஒவ்வொரு தெரிவும் செய்யப்பட்ட மாணவர் சதவீதம் | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 | விடையளிக்காத |
| 1 | 3 | 5% | 2% | **85%** | 5% | 3% | - |
| 2 | 2 | 6% | **91%** | 1% | 1% | 1% | - |
| 3 | 3 | 7% | 17% | **46%** | 5% | 24% | 1% |
| 4 | 5 | 10% | 13% | 7% | 5% | **64%** | 1% |
| 5 | 5 | 16% | 4% | 12% | 6% | **62%** | - |
| 6 | 4 | 1% | 4% | 4% | **84%** | 7% | - |
| 7 | 3 | 14% | 13% | **62%** | 4% | 6% | 1% |
| 8 | 5/2 | 14% | 43% | 9% | 10% | **23%** | 1% |
| 9 | 4 | 15% | 9% | 4% | **66%** | 5% | 1% |
| 10 | 5 | 1% | 5% | 8% | 16% | **70%** | - |
| 11 | 2 | 10% | **47%** | 11% | 7% | 25% | - |
| 12 | 4/2 | 19% | 16% | 32% | **15%** | 17% | 1% |
| 13 | 2 | 9% | **60%** | 6% | 10% | 14% | 1% |
| 14 | 1 | **58%** | 7% | 6% | 26% | 3% | - |
| 15 | 2 | 9% | **50%** | 16% | 11% | 13% | 1% |
| 16 | 1 | **50%** | 8% | 29% | 5% | 7% | 1% |
| 17 | 2 | 11% | **42%** | 10% | 6% | 30% | 1% |
| 18 | 2 | 35% | **35%** | 18% | 7% | 4% | 1% |
| 19 | 2 | 40% | **17%** | 11% | 19% | 12% | 1% |
| 20 | 3 | 18% | 9% | **37%** | 15% | 19% | 2% |
| 21 | 5 | 6% | 8% | 16% | 27% | **42%** | 1% |
| 22 | 1 | **38%** | 9% | 36% | 10% | 6% | 1% |
| 23 | 3 | 13% | 24% | **26%** | 10% | 26% | 1% |
| 24 | 5 | 30% | 5% | 10% | 4% | **51%** | - |
| 25 | 1 | **34%** | 6% | 9% | 18% | 33% | - |
| 26 | 3 | 15% | 7% | **37%** | 32% | 8% | 1% |
| 27 | 3 | 23% | 15% | **44%** | 9% | 8% | 1% |
| 28 | 5 | 7% | 5% | 17% | 20% | **51%** | - |
| 29 | 3 | 12% | 12% | **55%** | 13% | 6% | 2% |
| 30 | 3 | 7% | 20% | **38%** | 17% | 16% | 2% |

**அட்டவணை** 01

வினா இலக்கம் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்கு துலங்கல்களாக ஒவ்வொரு தெரிவினையும் தெரிவு செய்த விண்ணப்பதாரிகள் வீதமானது அட்டவணை இலக்கம் 01 இல் காட்டப்பட்டுள்ளது. ஒவ்வொரு வினாவுக்குமான சரியான தெரிவினை தெரிவு செய்த விண்ணப்பதாரிகளின் வீதமானது இங்கு நிழற்றிக் காட்டப்பட்டுளுள்ளது. அற்றில் விசேடமாக இனம் காணப்பட்ட வினாக்கள் சிலவற்றின் பகுப்பாய்வுகள் கீழே தரப்பட்டுள்ளன.

வினா இலக்கம் 12 இற்கான சரியான விடையாகிய தெரிவு 4 இனை விண்ணப்பதாரிகளில் 15% த்தினர் மாத்திரமே தெரிவு செய்துள்ளனர். விண்ணப்பதாரிகளில் 32% த்தினர் 3 வது தெரிவினையும், 19% த்தினர் 1 வது தெரிவினையும் சரியான விடையாக தெரிவு செய்திருந்தனர். 3 வது தெரிவினை தெரிவு செய்திருந்த விண்ணப்பதாரிகளில் சம்பள/கூலிச் செலவாக மொத்தச் சம்பளத்தை மாத்திரமே கவனத்தில் எடுத்திருந்தனர். கம்பனியின் EPF, ETF பங்களிப்பினை பதிவு செய்யாத உருப்படியாக எடுத்துள்ளனர். 1வது தெரிவினை தெரிவு செய்தவர்கள் தேறிய சம்பளத்தை, சம்பள/ கூலிச்செலவாக எடுத்துள்ளனர். உற்பத்திக் கணக்கில் பதிவு உற்பத்திக்குச்செலவுகள் தொடர்பிலான செயற்பாட்டு விளக்கமொன்று கிடைக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை திட்டமிடுவது மிக முக்கியமாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

வினா இலக்கம் 19 இற்கான **சரியான விடையாகிய தெரிவு 2 இனை** விண்ணப்பதாரிகளில் 17% த்தினர் மாத்திரமே தெரிவு செய்துள்ளனர். விண்ணப்பதாரிகளில் 40% த்தினர் சரியான விடையாக தெரிவு 1 இனையே தெரிவு செய்திருந்தனர். அவ்விடையினைத் தெரிவு செய்யும்போது வியாபாரக் கழிவானது வருமானமாக எடுக்கப்பட்டுள்ளதுடன், கடந்த வருட மீள்மதிப்புக் குறைவானது கழிக்கப்பட்டுள்ளது. இதன்மூலம் LKAS 1 தொடர்பிலான விளக்கமானது மாணவர்களுக்கு பலவீனமான முறையில் காணப்படுகின்றது என்பது தெளிவாகின்றது. கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளின்போது **மொத்த வருமானம் மற்றும் ஏனைய விரிவான வருமானங்கள்** மாற்றமடைகின்ற முறைகள் தொடர்பிலான தெளிவான விளக்கமொன்றை மாணவர்களுக்கு பெற்றுக் கொடுப்பது அவர்களுக்கு நன்மை பயக்கும்.

வினா இலக்கம் 08 இற்கான **சரியான விடையாகிய தெரிவு 05 இனை** விண்ணப்பதாரிகளில் 23% த்தினர் தெரிவு செய்திருந்தனர். 43% தெரிவு 2 இனையும், 14%த்தினர் 1 இனையும் விடையாக தெரிவு செய்திருந்தனர். 2 ஆவது தெரிவினை விடையாகத் தெரிவு செய்தமைக்கான காரணம் அவ்வினாவிற்குரிய வணிகத்தில் "கடன்பட்டோர், கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்குகள் பேணப்படவில்லை" என்ற கருதுகோளின் அடிப்படையினை உருவாக்கி கணிப்பீடுகளை மேற்கொண்டமையினாலாகும். கற்றல் - கற்பித்தல் செயன்முறைகளின்போது கணக்கீட்டுச் செயற்பாட்டில் இடம்பெறுகின்ற கால மாற்றங்கள் தொடர்பிலான விளக்கம்மொன்றையும் மாணவர்களுக்கு பெற்றுக் கொடுத்தல் முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 23 இற்கான **சரியான விடையாகிய தெரிவு 3 இனை** விண்ணப்பதாரிகளில் 26% த்தினர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். 26% த்தினர் 5 வது தெரிவினையும், 24%த்தினர் 2 வது தெரிவினையும் தெரிவு செய்திருந்தனர். விகிதத்தினைக் கணிப்பதற்கு உரிய சூத்திரத்தில் இலக்கங்களை பதிலீடு செய்வதற்கு மாத்திரம் மாணவர்கள் பெரும்பாலும் பழக்கமும் பயிற்சியும் பெற்றிருந்தமை இதன் மூலம் தெரிய வருவதுடன் விகிதங்களுக்கு வரைவிலக்கணம் கூறும் ஆற்றலும் மிகப்பலவீனமான மட்டத்தில் காணப்படுகின்றமையும் தெரியவருகின்றது. செயற்பாட்டு விடயங்களை உள்ளடக்கிய பயிற்சிகளை கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளின்போது பயன்படுத்துவது இங்கு பொருத்தமானதாகும்.

வினா இலக்கம் 25 இற்கான **சரியான விடையாகிய 1 வது தெரிவினை** விண்ணப்பதாரிகளில் 34%த்தினர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். 33% த்தினர் 5 வது தெரிவினையும், 18%த்தினர் 4 வது தெரிவினையும் விடையாக தெரிவு செய்திருந்தனர். வினாவினை தெளிவாக வாசித்து விளங்காமை, கிரய நடத்தை தொடர்பிலான விளக்கம் போதாமை, என்பவை இதற்கான காரணங்களாக இருக்கலாம். பொரும்பாலான **விண்ணப்பதாரிகள் அலகொன்றிற்கான மாறும் கிரயம்** என்பதற்குப் பதிலாக **மொத்த மாறும் கிரயம்** என்று கருத்தில் எடுத்திருந்தமை இதன்மூலம் தெரியவருகின்றது. கிரய நடத்தைகள் தொடர்பிலான விளக்கம் மாணவர்களுக்கு கிடைக்கும் வகையில் செயற்பாட்டு ரீதியான உதாரணங்களைப் பயன்படுத்தி கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைப்பது பயனுள்ளதாக அமையும்.

வினா இலக்கம் 18 இற்கான **சரியான விடையாகிய தெரிவு இலக்கம் 2 இனை** விண்ணப்பதாரிகளில் 35% த்தினரே தெரிவு செய்திருந்தனர். அத்துடன் 35%த்தினர் 1 வது தெரிவினையும் 18%த்தினர் 3 வது தெரிவினையும் தெரிவு செய்திருந்தனர். 1 வது தெரிவினைத் தெரிவு செய்திருந்த விண்ணப்பதாரகள் **வரிக்கு முன்னரான இலாபத்திற்குப்** பதிலாக **வருடத்திற்குரிய இலாபம்** என்பதைப் பயன்படுத்தி கணிப்பீடுகளை செய்துள்ளனர். வினாவினை வாசித்து சரியாக விளங்காமை இதன் மூலம் தெரியவருகின்றது. **நிதியாண்டுக்குரிய இலாபம், வரிக்கு முன்னரான இலாபம்** என்பவற்றை தெளிவாக வேறுபடுத்தக் கூடியவாறு மாணவர்களினுள் விளக்கமொன்றை உருவாக்குதல் பயனுடையதாக அமையலாம்.

வினா இலக்கம் 20 இற்கான **சரியான விடையாகிய 3 வது தெரிவினை** விண்ணப்பதாரிகளில் 37%த்தினரே தெரிவு செய்திருந்தனர். 19%த்தினர் 5 வது தெரிவினையும், 18%த்தினர் 1 வது தெரிவினையும் 15%த்தினர் 4 வது தெரிவினையும் தெரிவு செய்திருந்தனர். வினா இலக்கம் 19, 20 க்கு பொதுவான தகவல்கள் வழங்கப்பட்டிருந்ததுடன், **மொத்த விரிவான (முற்றுமடங்கிய) வருமானம்,** நிறுத்தி வைத்த உழைப்பு என்பவை மாற்றமடைகின்ற முறைகள் தொடர்பிலான விளக்கம் போதுமானளவில் மாணவர்களிடம் காணப்படவில்லை என்பது இதன்மூலம் தெரிவ வருகின்றது. இது தொடர்பில் சரியான விளக்கமொன்று கிடைக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.

வினா இலக்கம் 26 இற்கான சரியான விடையாகிய இலக்கம் 3 இனை விண்ணப்பதாரிகளில் 37% த்தினர் மாத்திரம் தெரிவு செய்திருந்தனர். விண்ணப்பதாரர்களில் 32% த்தினர் 4 வது தெரிவினையும் 15% த்தினர் 1வது தெரிவினையும் தெரிவுசெய்திருந்தனர். **பொருளாதாரக் கட்டளைத் தொகையினைக்** கணிப்பிடும்போது பயன்படுத்துகின்ற மாறிகளுக்கிடையில் காணப்படுகின்ற தொடர்பு சம்பந்தமான அறிவினை மாணவர்களுக்கு பெற்றுக் கொடுத்தல் மிக முக்கியமாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

வினா இலக்கம் 30 இற்கான சரியான விடையாகிய இலக்கம் 3 இனை விண்ணப்பதாரிகளில் 38%த்தினர் தெரிவு செய்துள்ளனர். விண்ணப்பதாரிகளில் முறையே 20%, 17%, 16%த்தினர் 2 வது, 4 வது, 5 வது தெரிவினை விடையாகத் தெரிவு செய்திருந்தனர். பாடதிட்டத்தில் இறுதித் தலைப்பான **முதலீட்டு மதிப்பீட்டு நுட்ப முறைகள்** தொடர்பிலான விளக்கம் மாணவர்களிடம் போதுமானளவில் இல்லை என்பது இதன் மூலம் தெரியவருவதுடன், பாடப்பகுதியினை குறித்த காலத்தில் முடிப்பதற்கு கூடுதல் கவனம் செலுத்தப்படல் வேண்டும்.

வினா இலக்கம் 22 இற்கான சரியான விடையாகிய தெரிவு இலக்கம் 1 இனை விண்ணப்பதாரிகளில் 38%த்தினர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். அத்துடன் 36%த்தினர் சரியான தெரிவாக இலக்கம் 3 இனைத் தெரிவு செய்திருந்தனர். ஏற்கனவே குறிப்பிட்டவாறு கூடுதலான மாணவர்கள் பிரதியீடு செய்கின்ற பொறிமுறையினையே விகிதக் கணிப்பிட்டின்போது செய்வதற்கு பழக்கப்பட்டிருந்தமையை இதன்மூலம் அறிய முடிகின்றது. கற்றல் - கற்பித்தல் செயல்முறையின்போது விகிதங்களை செயற்பாட்டு ரீதியாக பயன்படுத்துதல், மற்றும் தீர்மானம் எடுக்கும்போது அது முக்கியத்துவம் பெறும் முறை என்பன தொடர்பிலான விளக்கத்தினைப் பெற்றுக் கொடுத்தல் மிக முக்கியமாகும்.

வினா இலக்கம் 21இன் **சரியான விடையாகிய 5 வது தெரிவினை** விண்ணப்பதாரிகளில் 42%த்தினர் தெரிவு செய்திருந்தனர். 27%மானோர் 4 வது தெரிவினையும் 16%மானோர் 3 வது தெரிவினையும் தெரிவு செய்திருந்தனர். வருடாந்தத் தேய்வினைக் கணிப்பிடுவது சிறந்த மட்டத்தில் காணப்பட்டாலும், இயந்திரத்தின் தேறிய பெறுமதியினை கண்டுபிடிப்பதற்கான அறிவானது பலவீனமான மட்டத்தில் காணப்படுவது தெரியவருகின்றது. LKAS - 16 இற்கேற்ப சொத்தொன்றின் **தேறிய பெறுமதி உள்ளடங்களாக ஏனைய பெறுமதிகளைக்** கணிப்பிடல் தொடர்பிலான மேலதிக உதாரணங்களைப் பயன்படுத்தி கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளைத் திட்டமிடல் வேண்டும்.

வினா இலக்கம் 17இன் **சரியான விடையாகிய 2 வது தெரிவினை** விண்ணப்பதாரிகளில் 42%த்தினர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். விண்ணப்பதாரிகளில் 30%மானோர் தெரிவு இலக்கம் 05 இனை தெரிவு செய்திருந்தனர். கணக்கீட்டு நியமம் இலக்கம் 37 தொடர்பான விளக்கம் மாணவர்களிடம் போதுமான அளவில் காணப்படவில்லை என்பது இதிலிருந்து விளங்குகின்றது. நிதிக் கூற்றுக்களைத் தயாரிக்கும்போதும் அதனை முன்வைக்கும்போதும் கணக்கீட்டு நியமங்களை பயன்படுத்துகின்ற முறையினை உதாரணங்களுடன் விளக்குவது பொருத்தமானதாகும்.

வினா இலக்கம் 27 இன் **சரியான விடையாகிய தெரிவு இலக்கம் 3 இனை** விண்ணப்பதாரிகளில் 44% மானோர் தெரிவு செய்திருந்தனர். 23%மானோர் 1 வது தெரிவினையும் 15% மானோர் 2 வது தெரிவினையும் தெரிவு செய்திருந்தனர். இது உற்பத்திக் கிரயம் தொடர்பிலான வினா என்பதுடன், **பொது மேந்தலைக் கிரய உறிஞ்சுதல்** தொடர்பிலான விளக்கம் விண்ணப்பதாரிகளிடம் போதுமான அளவு இல்லை என்பது இதன்மூலம் தெரிய வருகின்றது. கற்றல் - கற்பித்தலின்போது மேந்தலைக் கிரயம் உறிஞ்சுதல் தொடர்பிலான கூடுதலான உதாரணங்களைப் பயன்படுத்தி மாணவர்களுக்கு விளக்கமளிப்பது பயனுள்ளதாக அமையும்.

வினா இலக்கம் 03 இற்கான **சரியான விடையாகிய தெரிவு 3 இனை** விண்ணப்பதாரிகளில் 46%த்தினர் தெரிவு செய்திருந்தனர். 24%த்தினர் 5 வது தெரிவினையும், 17%த்தினர் 2 வது தெரிவினையும் தெரிவு செய்திருந்தனர். கணக்கீட்டு எண்ணக்கருக்களை நடைமுறையில் பயன்படுத்துவது தொடர்பிலான செயற்பாட்டு ரீதியான அறிவு மாணவர்களிடம் குறைவாக காணப்படுகின்றது என்பது இதிலிருந்து விளங்குகின்றது. கற்றல் - கற்பித்தல் செயன்முறைகளை ஒழுங்கமைக்கும்பொது இது தொடர்பில் கூடுதலாகக் கவனம் செலுத்தப்படல் வேண்டும்.

வினா இலக்கம் 11 இற்கான **சரியான விடையாகிய 2 வது தெரிவினை** விண்ண்பதாரிகளில் 47%மானோர் தெரிவு செய்திருந்தனர். 25%மானோர் 5 வது தெரிவினையும் 10%, 11% மானோர் முறையே 1 வது 3 வது தெரிவுகளையும் தெரிவு செய்திருந்தனர். VAT உட்பட செலுத்திய தொகையினை இயந்திரக் கிரயக் கணிப்பீட்டின்போது சேர்த்திருந்த விண்ணப்பதாரிகளுக்கே 5வது விடை கிடைக்கப்பெற்றிருந்தது. கற்றல் - கற்பித்தல் செயன்முறையின்போது VAT தொடர்பில் பதிவு செய்யப்பட்ட வணிகமொன்று நடைமுறை அல்லாத சொத்துக்களை கொள்வனவு செய்யும்போதும் VAT இனை மீள அறவிட்டுக்கொள்ள முடியும் என்பதை மாணவர்களுக்கு அறியச்செய்தல் வேண்டும்.

வினா இலக்கம் 02 இற்கு விண்ணப்பதாரிகளில் பெரும்பாலானோர் சிறப்பாக விடையளித்துள்ளனர். சரியான விடையாகிய இலக்கம் 2 இனைத் தெரிவு செய்த விண்ணப்பதாரிகளின் வீதம் 91% ஆகும். இது கணக்கீட்டுச் செயன்முறையினுள் இடம்பெறுகின்ற கருமங்களின் ஒழுங்குமுறை தொடர்பிலான அறிவு பயன்பாடு என்பவற்றை வெளிப்படுத்துகின்ற வினாவொன்றாகும்.

வினா இலக்கம் 01 இற்கு சரியாக விடையளித்த விண்ணப்பதாரிகள் 85% ஆகும். இது நிதிக் கணக்கீட்டின் அடிப்படைக் கருமங்கள் தொடர்பிலான அறிவினை பரீட்சிக்கும் வினா என்பதுடன் சரியாக விடையளித்தவர்களின் வீதமானது போதுமானதாக இல்லை என்பதை இங்கு குறிப்பிடலாம். கணக்கீட்டுச் சமன்பாட்டினை பரீட்சிக்கும் வினாவாகிய வினா இலக்கம் 6 ற்கு சரியாக விடையளித்தவல்களின் வீதம் 84% மாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

**2.1.7 வினாத்தாள் I இல் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு புள்ளிகள் வழங்கப்பட்டுள்ள விதம்.**

| வினா இலக்கம் | புள்ளிகள் பெற்றுள்ள சதவீதம் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | புள்ளி 0 | புள்ளி 1 | புள்ளி 2 | புள்ளி 3 | புள்ளி 4 | விடையளிக்காத |
| 31 | 1% | 3% | 18% | 37% | 41% | |
| 32 | 6% | 35% | 15% | 21% | 21% | 2% |
| 33 | 4% | 6% | 12% | 21% | 56% | 1% |
| 34 | 13% | 13% | 26% | 23% | 22% | 3% |
| 35 | 21% | 1% | 41% | - | 33% | 4% |
| 36 | 14% | 7% | 14% | 15% | 45% | 5% |
| 37 | 6% | 10% | 18% | 28% | 34% | 4% |
| 38 | 14% | 11% | 28% | 1% | 41% | 5% |
| 39 | 35% | - | 10% | - | 49% | 6% |
| 40 | 15% | - | 10% | - | 70% | 5% |
| 41 | 27% | 4% | 21% | 3% | 36% | 9% |
| 42 | 38% | - | 23% | - | 25% | 14% |
| 43 | 3% | 8% | 14% | 28% | 45% | 2% |
| 44 | 8% | 14% | 29% | 27% | 21% | 1% |
| 45 | 47% | 1% | 31% | - | 8% | 13% |
| 46 | 58% | - | 18% | - | 9% | 15% |
| 47 | 57% | - | 18% | - | 13% | 12% |
| 48 | 12% | - | 15% | - | 67% | 6% |
| 49 | 44% | - | 6% | - | 37% | 13% |
| 50 | 51% | - | 17% | - | 19% | 13% |

**அட்டவணை 02**

வினா இலக்கம் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு புள்ளிகள் பெற்றுள்ள முறை மேலே அட்டவணை 02 இல் காட்டப்பட்டுள்ளது. அதற்கேற்ப வினா இலக்கம் 46, 47, 50 இற்கு 0 புள்ளி (பூச்சியம்) பெற்ற வீதம் 50% த்தையும் தாண்டியுள்ளது.

கணக்கீட்டுக் கோட்பாடுகள் தொடர்பிலான அறிவினை செயற்பாட்டு ரீதியாக பயன்படுத்துகின்ற ஆற்றல் பலவீனமான மட்டத்தில் காணப்படுவதுடன் அவ்வினாக்களை வாசித்து சரியாக விளங்கியிருக்கவில்லை என்பதும் இங்கு தெரியவருகின்றது.

வினா இலக்கம் 46 இற்கு விண்ணப்பதாரிகளில் 58% மானோர் 0 புள்ளி (பூச்சியம்)யினைப் பெற்றுள்ளதுடன், உச்ச புள்ளியாகிய 04 இனை 9% மானோர் மாத்திரமே பெற்றுள்ளனர். விண்ணப்பதாரிகளில் 15% த்தினர் எந்த விதமான விடையினையும் எழுதியிருக்கவில்லை. வினாவினை உரியவாறு வாசித்து விளங்க முடியாமல் போனமையினால் **நிருத்திவைத்த இலாபத்தையும் சரியாகக் கணிக்க முடியாமல் போனமையே** இதற்குரிய காரணமாக இருக்கலாம். அத்துடன் குறிப்பிட்ட திகதியொன்றின் உரிமையினை சரியாகக் கணிப்பிடுவதில் பலவீனம் மாணவர்களிடம் காணப்படுவது இதன் மூலம் தெரிய வருவதனால் கற்றல் - கற்பித்தல் செயன்முறைகளைத் திட்டமிடும்போது இது தொடர்பில் கூடுதல் கவனம் செலுத்தப்படல் முக்கியமானது.

வினா இலக்கம் 47 இற்கு விண்ணப்பதாரிகளின் 57% மானோர் 0 புள்ளி (பூச்சியம்)யினைப் பெற்றுள்ளதுடன் 12% மானோர் எந்த விடையினையும் எழுதியிருக்வில்லை. உச்ச புள்ளியாகிய 04 புள்ளியினை 13% மானோர் மாத்திரமே பெற்றுள்ளனர். இது **சிக்கன கட்டளை அளவு** தொடர்பான வினா என்பதுடன் வழங்கப்பட்டுள்ள தகவல்களின் உதவியுடன் மொத்தக் கட்டளை அளவினைக் கண்டுபிடிக்க முடியாமல் போனமையே இதற்கான காரணம் எனக் கூறலாம். சூத்திரத்தின் உதவியுடன் தொகைகளைப் பிரதியீடு செய்து பொருளாதார (சிக்கன) கட்டளைக்கணியத்தைக் கணிப்பதற்கு மாத்திரம் மாணவர்கள் பழக்கப்பட்டு பயிற்சி பெற்றுள்ளமை தெரியவருவதுடன், அச்சூத்திரத்தின் மாறிகள் தொடர்பிலான பிரயோக ரீதியான அறிவு மாணவர்களிடம் குறைவாகக் காணப்படுவது இதன் மூலம் தெரியவருகின்றது.



Download Past Papers at : www.freebooks.lk

வினா இலக்கம் 50 இற்குரிய மொத்தப்புள்ளியாகிய 04 இனைப் பெற்ற விண்ணப்பதாரிகளின் வீதம் 19% மாகும். 0 புள்ளி (பூச்சியம்)யினைப் பெற்றவர்களின் வீதம் 51% ம் என்பதுடன், எந்த விடையினையும் அளிக்காதவர்களின் வீதம் 13% மாகும். கணக்கீட்டு பாடத்திட்டத்திலல் இறுதித் தேர்ச்சி மட்டமாகிய **மூலதன முதலீட்டுத் தீர்மானம்** தொடர்பிலான விளக்கம் போதுமான அளவில் காணப்படாமை இதற்குரிய காரணமாக இருக்கலாம். கூடுதலான பயிற்சிகளைப் பயன்படுத்தி இது தொடர்பிலான விளக்கத்தைப் பெற்றுக் கொடுத்தல் முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 45 இற்கு 0 புள்ளி (பூச்சியம்)யினைப் பெற்ற விண்ணப்பதாரிகளின் வீதம் 47% மாகும். 13%மானோர் எவ்வித விடையினையும் எழுதியிருக்கவில்லை. 8% மானோர் மாத்திரம் முழுப்புள்ளி 4% த்தினையும் பெற்றுள்ளனர். இவ்வினா நிதிக்கணக்கீட்டு விகிதங்கள் தொடர்பிலான வினாவொன்றாகும். வினாவினை சரியாக வாசித்து விளங்காமையே **வரிக்கு முன்னரான இலாபத்தை** சரியாகக் கணிக்க முடியாமல் போனமைக்குரிய காரணமாயிருக்கலாம். கற்றல் - கற்பித்தல் செயன்முறையின்போது விகிதப்பகுப்பாய்வு தொடர்பில் விளக்கத்தைப் பெற்றுக் கொடுத்தல் மிக முக்கியமாகும்.

வினா இலக்கம் 49 இற்கு 0 புள்ளி (பூச்சியம்) பெற்ற விண்ணப்பதாரிகளின் விகிதம் 44%மாகும். 13%மானோர் எவ்வித விடையினையும் எழுதியிருக்கவில்லை. மொத்தப்புள்ளியாகிய 04 இனைப் பெற்றவர்களின் வீதம் 37%மாகும். **கிரய இலாப எல்லைப்பகுப்பாய்வு** உள்ளடங்கிய சூத்திரம் மற்றும் அவற்றின் பயன்பாடு தொடர்பிலான விளக்கம் குறைவாக இருந்தமை இதற்குரிய காரணம் எனக் கூறமுடியும். கூடுதலான பயிற்சிகளைப் பயன்படுத்தி கற்றல் - கற்பித்தல் செயன்முறைகளைத் திட்டமிட்டுக்கொள்வது இங்கு பொருத்தமானது எனக் கூறலாம்.

வினா இலக்கம் 42 இற்கு முழுப்புள்ளியாகிய 04 இனையும் பெற்றவர்களின் வீதம் 25% மாகும். விண்ணப்பதாரிகளின் 38% மானோர் 0 புள்ளி (பூச்சியம்)யினைப் பெற்றுள்ளனர். 14% மானோர் எவ்வித விடையினையும் அளிக்கவில்லை. **பங்கு வழங்கலும், கணக்குகளிலும் பதிவு செய்தலும்** தொடர்பிலான பொதுக் குறிப்பேட்டுப் பதிவுகள் அவை தொடர்பிலான விளக்கம் மற்றும் **உரிமை மாறுவதில் தாக்கம் செலுத்தும் காரணிகள்** என்பவை தொடர்பிலான விளக்கதைப் பெற்றுக் கொடுக்கும் வகையிலான கற்றல் - கற்பித்தல் செயன்முறைகளில் கூடுதல் கவனம் செலுத்துவது முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 39 இற்கு 0 புள்ளி (பூச்சியம்) பெற்றவர்கள் 35%மாகும். 6%மானோர் எவ்விதமான விடையினையும் எழுதியிருக்கவில்லை. முழுப்புள்ளியாகிய 04 புள்ளிகளையும் பெற்றவர்கள் 49% மாகும். இது உற்பத்திக் கிரயத்தை கணிப்பது தொடர்பில் மிக எளிய பிரச்சினையை உள்ளடக்கிய வினாவொன்றாகும். உற்பத்திக் கிரய கணிப்பீடு தொடர்பிலான தேர்ச்சியினைப் பெற்றுக்கொடுக்கும்போது கூடுதலான அளவு பயிற்சிகளைப் பயன்படுத்துவது முக்கியமானது எனலாம்.

வினா இலக்கம் 41 இற்குரிய 04 புள்ளிகளாகப் பெற்றவர்கள் 36% மாகும். 0 புள்ளி (பூச்சியம்)யினைப் பெற்றவர்கள் 27% மாவதுடன் எந்தவித விடையினையும் எழுதாதவர்களின் வீதம் 9% மாகும். **பங்குடமை வணிகமொன்றின் இலாபப் பகிர்வும், நடைமுறைக் கணக்கில் இலாபப் பகிர்வினைப் பதிவு செய்தலும்** என்பன தொடர்பிலான விளக்கம் போதுமான அளவில் இல்லை என்பது இங்கு தெளிவாகின்றது. அதற்கேற்ப பங்காளர் என்ற வகையில் பெறுகின்ற சம்பளம், மூலதன வட்டி, இறுதிப் பங்கிலாபப்பங்கு போன்ற சகலதும் இலாபப்பகிர்வு என்பது விளங்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறையானது திட்டமிடப்படல் வேண்டும்.

வினா இலக்கம் 40 இற்கு மொத்தப்புள்ளியாகிய 4 இனையும் பெற்றவர்களின் வீதம் 70% மாகும். பங்குடமை வணிகமொன்றின் உரிமையாகிய நிதி நிலமைக் கூற்றில் காட்டப்படுகின்ற இரு உருப்படிகள் தொடர்பில் இங்கு பரீட்சிக்கப்பட்டது. வினா இலக்கம் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுடன் ஒப்பிடும்போது கூடுதலான புள்ளியினை இவ்வினாவிற்கு விண்ணப்பதாரிகள் பெற்றிருந்தாலும் அவ்வீதமமானது போதுமானதாக இல்லை என்பது புலனாகின்றது. பங்குடமை வணிகமொன்றின் உரிமையில் உள்ளடங்கும் விடயங்கள் சிறப்பாக விளங்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறையானது ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.

வினா இலக்கம் 48 தொடர்பில் 67% மானோர் மொத்தப் புள்ளியினையும் பெற்றிருந்தனர். செயற்பாட்டு ரீதியான உதாரணங்களைப் பயன்படுத்தி நேர் கூலி, நேரில் கூலி தொடர்பிலான கற்றல் - கற்பித்தல் செயன்முறைகள் ஒழுங்கமைக்கப்படுமாயின் இவ்வீதத்தை மேலும் கூட்ட முடியும் எனக் கூறலாம்.



Download Past Papers at : www.freebooks.lk

## 2.2 வினாத்தாள் II உம் அதற்கு விடையளிக்கப்பட்டமை தொடர்பான தகவல்களும்

### 2.2.1 வினாத்தாள் II இன் கட்டமைப்பு

நேரம் 3 மணித்தியாலம்

இவ்வினாத்தாள் 07 வினாக்களை கொண்டுள்ளது. முதலாம், இரண்டாம் வினாக்கள் கட்டாயமானவை என்பதுடன், ஒரு வினாவிற்கு 20 புள்ளிகள் வீதம் அவற்றிற்கு 40 புள்ளிகளாகும். ஏனைய 05 வினாக்களில் 04 வினாக்களைத் தெரிவு செய்தல் வேண்டும் என்பதுடன் அவற்றில் ஒரு வினாவிற்கு 15 புள்ளிகள் வீதம் மொத்தம் 60 புள்ளிகளாகும். மொத்தம் 100 புள்ளிகளாகும்.

இறுதிப் புள்ளியினைக் கணிப்பிடல் : வினாத்தாள் I = 100 புள்ளிகள்
வினாத்தாள் II = 100 புள்ளிகள்
இறுதிப் புள்ளிகள் 200 ÷ 2 = 100

* விடைத்தாள் மதிப்பீட்டின் போது சகல வினாக்களுக்கும் புள்ளிகள் இரட்டிப்பாக்கி வழங்கப்படும். அதற்கேற்ப இறுதிப் புள்ளியினைக் கணிப்பிடல் :
வினாத்தாள் I = 200 புள்ளிகள்
வினாத்தாள் II = 200 புள்ளிகள்
இறுதிப் புள்ளிகள் 400 ÷ 4 = 100



Download Past Papers at : www.freebooks.lk

## 2.2.2 வினாத்தாள் II - எதிர்பார்க்கப்பட்ட விடைகள், புள்ளி வழங்கும் திட்டம், விடையளித்தல் தொடர்பான அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள்

**வினாத்தாள் II இல் ஒவ்வொரு வினாக்களுக்கும் விடையளிக்கப்பட்டமை தொடர்பிலான அவதானிப்புகள், வரைபடம் 2, 3, 4. என்பவற்றின் அடிப்படையில் இது தயாரிக்கப்பட்டுள்ளது. வினாக்களுக்கு உரிய வரைபடங்கள் ஒவ்வொரு வினாவினதும் அவதானிப்பு, முடிவுகளுடனும் இங்கு தரப்பட்டுள்ளது.**

### வினாப்பத்திரம் II

### வினா இலக்கம் - 01

**1.** வரையறுத்த சாரங்கன் பொதுக் கம்பனியின் 31.03.2015 இல் உள்ளவாறான பரீட்சைமீதி கீழே தரப்பட்டுள்ளது.

| | வரவு (ரூ.'000) | செலவு (ரூ.'000) |
|---|---|---|
| கொள்வனவுகள் | 7 500 | |
| வாடகை | 960 | |
| சம்பளங்கள் | 1 000 | |
| மோட்டார் வாகனங்கள் பராமரிப்புச் செலவுகள் | 321 | |
| குத்தகை வட்டி | 720 | |
| நடைமுறை ஆண்டின் முதல் மூன்று காலாண்டுக்காக செலுத்தப்பட்ட வருமான வரி | 90 | |
| 01.04.2014 இல் ஆதனம், பொறி மற்றும் உபகரணம் | 10 000 | |
| 01.04.2014 இல் சரக்கிருப்பு | 2 400 | |
| வியாபார வருமதிகள் | 3 000 | |
| வங்கியிலுள்ள காசு | 241 | |
| மூன்று மாத கால திறைசேரி உண்டியல்கள் (31.03.2015 இல் முதலிடப்பட்டது) | 1 000 | |
| விற்பனைகள் | | 12 300 |
| 01.04.2014 இலுள்ள கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | | 5 000 |
| 01.04.2014 இல் நிறுத்திவைத்த வருவாய்கள் | | 1 794 |
| 01.04.2014 இல் நிலத்தின் மீதான மீள் மதிப்பீட்டு ஒதுக்கம் | | 1 000 |
| குத்தகை கடன்கொடுத்தோர் | | 1 788 |
| வியாபார செல்மதிகள் | | 4 000 |
| செலுத்த வேண்டிய ஊ.சே.நி. (EPF) (ஊழியர் பங்களிப்பு 10% மாத்திரம்) | | 100 |
| 01.04.2014 இலுள்ள திரண்ட பெறுமானத்தேய்வு | | 1 000 |
| 01.04.2014 இலுள்ள ஐயக்கடன்களுக்கான ஏற்பாடு | | 250 |
| | **27 232** | **27 232** |

**மேலதிக தகவல்கள்:**

31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான நிதிக் கூற்றுகளைத் தயாரிப்பதற்கு முன்னர் பின்வருவனவற்றுக்கான சீராக்கம் செய்யப்படல் வேண்டும்.

(i) 01.04.2014 இல் கம்பனியின் அலுவலகமானது புதிய இடமொன்றுக்கு மாற்றப்பட்டது. இத்திகதியில் இரண்டு வருடங்களுக்கான வாடகை இதற்காகச் செலுத்தப்பட்டுள்ளதுடன் இத்தொகை முழுவதும் நடைமுறை ஆண்டிற்கான வாடகையாகப் பதிவிடப்பட்டுள்ளது.

(ii) 01.04.2014 இலுள்ள ஆதனம், பொறி மற்றும் உபகரணத்தினதும் அவற்றின் திரண்ட பெறுமானத்தேய்வுகளினதும் உள்ளடக்கம் கீழே தரப்பட்டுள்ளது:

| விபரம் | கிரயம்/பெறுமதி (ரூ.'000) | திரண்ட பெறுமானத்தேய்வு (ரூ.'000) |
|---|---|---|
| நிலம் - நியாய விலையில் | 6 000 | – |
| மோட்டார் வாகனம் (குத்தகை அடிப்படையில்) | 3 000 | 600 |
| அலுவலக உபகரணங்கள் | 1 000 | 400 |
| **மொத்தம்** | **10 000** | **1 000** |

எல்லாப் பெறுமானத்தேய்விடக்கூடிய ஆதனம், பொறி, உபகரணங்கள் என்பவற்றுக்கு நேர்கோட்டு முறையில் வருடத்திற்கு 20% பெறுமானத்தேய்விடப்படல் வேண்டும். நடைமுறையாண்டுக்கான பெறுமானத்தேய்வு செய்யப்படல் வேண்டும்.

(iii) 31.03.2015 இல் நிலமானது தகைமை பெற்ற மதிப்பீட்டாளரினால் ரூ. 4 500 000 என மீள் மதிப்பீடு செய்யப்பட்டது.



Download Past Papers at : www.freebooks.lk

(iv) மோட்டார் வாகனம் 01.04.2013 இல் நிதிக் குத்தகையின் கீழ் 4 வருட காலத்திற்கு விநியோக நோக்கத்திற்காக வாங்கப்பட்டது. இக் குத்தகைக்குச் செலுத்த வேண்டிய வருடாந்த தவணைக் கட்டணம் ரூ. 720 000 ஆகும். நடைமுறை வருடத்திற்கான குத்தகை தவணைக் கட்டணம் செலுத்தப்பட்டுள்ளதுடன் இது குத்தகை வட்டிக் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது. நடைமுறை வருடத்திற்கும் அடுத்த இரண்டு வருடங்களுக்குமான குத்தகை வட்டி கீழே தரப்பட்டுள்ளது.

| வருடம் | வட்டி (ரூ.'000) |
|---|---|
| 2014 / 2015 | 179 |
| 2015 / 2016 | 125 |
| 2016 / 2017 | 68 |

(v) 31.03.2015 இல் சரக்கிருப்பின் கிரயம் மற்றும் இதன் தேறிய தேறக்கூடிய பெறுமதி என்பன முறையே ரூ. 1 800 000, ரூ. 2 000 000 ஆக இருந்தது. எனினும் முழு சரக்கிருப்பும் ரூ. 1 600 000 இற்கு 20.04.2015 இல் விற்பனை செய்யப்பட்டது. இயக்குனர்கள் 15.05.2015 இல் இக் கம்பனியின் நிதிக் கூற்றுகளை அங்கீகரித்தனர்.

(vi) கம்பனியானது வருட முடிவிலுள்ள வியாபார வருமதிகளின் மீதிக்கு 10% ஐயக்கடனுக்காக ஏற்பாடு செய்கிறது.

(vii) பின்வரும் செலவுகள் விற்பனைக் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளன.

| விடயம் | தொகை (ரூ.'000) |
|---|---|
| முகவர்களுக்கான விற்பனைத் தரகு | 1 400 |
| வியாபார வருமதிகளுக்காக அனுமதித்த கழிவு | 300 |
| **மொத்தம்** | **1 700** |

(viii) நிறுத்திவைத்த வருவாய்களை மூலதனமாக்குவதன் மூலம் தற்போதுள்ள பங்குதாரர்களுக்கு 50 000 சாதாரண பங்குகள் பங்கொன்று ரூ.10 வீதம் வழங்கப்பட்டன.

(ix) கம்பனியானது ஆறு மாத கால உத்தரவாதத்துடன் பொருட்களை விற்பனை செய்கின்றது. நம்பத்தகுந்த மதிப்பீட்டின்படி விற்பனைப் பெறுமதியில் 2% ஐ இவ் உத்தரவாதத்திற்கான ஏற்பாடாக மேற்கொள்ளல் வேண்டும்.

(x) முழு வருடத்திற்குமான ஊ.சே.நி. (EPF) மற்றும் ஊ.ந.நி. (ETF) ஆகியவற்றுக்கான கம்பனியின் பங்களிப்பு இதுவரை வழங்கப்பட்டிருக்கவில்லை. ஊ.சே.நி. மற்றும் ஊ.ந.நி. என்பவற்றுக்கு ஊழியர்களின் மொத்தச் சம்பளத்தில் முறையே 15%, 3 % இனைக் கம்பனி பங்களிப்புச் செய்கின்றது.

(xi) நடைமுறை ஆண்டிற்கான வருமானவரியானது வரிக்கு முந்திய இலாபத்தில் 1/3 என மதிப்பீடு செய்யப்பட்டது.

**வேண்டப்படுவது:**

LKAS 1 (நிதிக் கூற்றுகளைச் சமர்ப்பித்தல்) இன்படி வரையறுத்த சாரங்கன் பொதுக் கம்பனி பிரசுரிப்பதற்கான பின்வரும் நிதிக் கூற்றுகள்: (குறிப்புகள் உட்பட)

(1) 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான முற்றுமடங்கிய வருமானக் கூற்று

(2) 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான உரிமையாண்மை மாற்றல் கூற்று

(3) 31.03.2015 இலுள்ளவாறான நிதி நிலைமைக் கூற்று **(20 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**வினா இலக்கம் 01**

(1) **வரையறுத்த சாரங்கன் பொதுக்கம்பனி**
**31.03.2015ல் முடிவடைந்த வருடத்திற்கான முற்றுமடங்கிய வருமானக்கூற்று**

| | குறிப்பு | (ரூ'000) | |
|---|---|---|---|
| விற்பனை | | 14 000 | (01) |
| விற்பனைக் கிரயம் | | (8 100) | (01) |
| மொத்தலாபம் | (01) | 5 900 | |
| விநியோகக் கிரயம் | | (2 951) | (04) |
| நிர்வாகச் செலவுகள் | | (1 860) | (04) |
| ஏனைய தொழிற்பாட்டுச் செலவுகள் | | (700) | (02) |
| நிதிச் செலவுகள் | | (179) | (01) |
| வரி கழிக்குமுன் செயற்பாட்டு இலாபம் | 01 | 210 | |
| ஆண்டுக்கான வருமானவரி | (01) | (70) | → பெற்ற வரிக்கு முன்னரான இலாபத்தில் 1/3 பங்கு |
| வருடத்திற்கான இலாபம் | (01) | 140 | |
| **ஏனைய முற்றும் அடங்கிய வருமானம்** | | | |
| காணி மீள்மதிப்பீட்டு நட்டம் | | (1 000) | (01) |
| ஆண்டுக்கான மொத்த முற்றும் அடங்கிய வருமானம | (01) | (860) | |

குறிப்பு 01 வரிக்குமுன் லாபம் பின்வரும் செலவுகள் கழித்தபின்

| | ரூ.' 000 | |
|---|---|---|
| பெறுமானத்தேய்வு | 800 | |
| குத்தகை வட்டி | 179 | |
| இருப்பு பெறுமதி வீழ்ச்சி நட்டம் | 200 | |
| பொறுப்புச் சான்றிதழுக்கான ஒதுக்கம் | 280 | பெற்ற பெறுமதி |
| ஊழியர் சேமலாப நிதிச்செலவு | 150 | |
| ஊழியர் நம்பிக்கை நிதிச்செலவு | 30 | |
| காணி மீள்மதிப்பு நட்டம் | 500 | |

(குத்தகை வட்டி முதல் ஊழியர் நம்பிக்கை நிதிச்செலவு வரை } (02))

(ஏதாவது 4 விடயங்களுக்கு 02 புள்ளிகள்)
(21 புள்ளிகள்)



Download Past Papers at : www.freebooks.lk

| செய்கை ரூ.' 000 | | | | | |
|---|---|---|---|---|---|
| **விற்பனை** | | | **விற்பனைக் கிரயம்** | | |
| விற்பனை | 12 300 | | 2014.04.01 ஆரம்ப இருப்பு | 2 400 | |
| விற்பனை தரகு | 1 400 | 01 | கொள்வனவு | 7 500 | |
| கொடுத்த கழிவு | 300 | | 2015.03.31 இறுதி இருப்பு | (1 800) | 01 |
| | 14 000 | | | 8 100 | |
| **விநியோகக் கிரயம்** | | | **நிர்வாகச் செலவுகள்** | | |
| மோட்டார் பெறுமானத்தேய்வு | 600 | 01 | வாடகை | 480 | 01 |
| விற்பனைத் தரகு | 1 400 | 01 | அலுவலக உபகரண பெறுமானத்தேய்வு | 200 | 01 |
| அனுமதித்த கழிவு | 300 | | ஊழியர் சேமலாப நிதிசெலவு (EPF) | 150 | 01 |
| உத்தரவாத ஏற்பாடு | 280 | 01 | ஊழியர் நம்பிக்கை நிதிச்செலவு (ETF) | 30 | 01 |
| மோட்டார் பராமரிப்பு செலவு | 321 | | சம்பளங்கள் | 1 000 | |
| ஐயக்கடன் | 50 | 01 | | 1 860 | |
| | 2 951 | | | | |
| **ஏனைய தொழிற்பாட்டு செலவுகள்** | | | | | |
| காணி மீள்மதிப்பீட்டு நட்டம் | 500 | 01 | **நிதிச்செலவு** | 179 | 01 |
| இருப்பு பெறுமதி வீழ்ச்சி நட்டம் | 200 | 01 | குத்தகை வட்டி | | |
| | 700 | | | | |

(2) வரையறுத்த சாரங்கன் பொதுக்கம்பனியின்

31.3.2015ல் முடிவடைந்த ஆண்டிற்கான உரிமையாண்மை மாற்றக் கூற்று ரூ' 000

| | கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | மீள் மதிப்பீட்டு ஒதுக்கம் | நிறுத்தி வைத்த வருவாய் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 2014.04.01 ல் மீதி | 5 000 | 1 000 | 1 794 | 7 794 |
| மொத்த முற்றும் அடங்கிய வருமானம் | 500 | (01) | (500) | - |
| | | | | (860) → பெற்ற பெறுமதி |
| * உபகாரப் பங்கு வழங்கல் | | (1 000) (01) | 140 (01) | |
| 2015.03.31 மீதி | 5 500 | - | 1 434 | 6 934 |

* உருப்படிகள் இரண்டும் வெவ்வேறாகக் காட்டப்பட்டிருப்பின் 01 புள்ளி

**(03 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

(3)

வரையறுத்த சாரங்கன் பொதுக்கம்பனி

31/03/2015 இல் உள்ளவாறான நிதி நிலைமைக்கூற்று (ரூ 000)

| | குறிப்பு | (ரூ.'000) | |
|---|---|---|---|
| **நடைமுறை அல்லாத சொத்துக்கள** | | | |
| ஆதனம் பொறி மற்றும் உபகரணங்கள் | 02 (01) | 6 700 | |
| **நடைமுறைச் சொத்துக்கள்** | | | |
| இறுதிச் சரக்கிருப்பு | | 1 600 | (01) |
| வியாபார வருமதிகள் | | 2 700 | (01) |
| முற்பண வாடகை | | 480 | (01) |
| முற்பண வருமான வரி | பெற்ற பெறுமதிக்கு (01) | 20 | |
| காசும் காசுக்கு சமமானவை | | 1 241 | (01) வெவ்வேறாக இருந்தாலும் புள்ளி வழங்கவும் |
| மொத்த சொத்துக்கள் | | 12 741 | |
| **உரிமையாண்மையும் பொறுப்புக்களும்** | | 5 500 | (01) |
| **கூறப்பட்ட பங்கு மூலதனம்** | | | |
| சாதாரண பங்குகள் | | | |
| **ஒதுக்கங்கள்** | (01) | 1 434 | |
| நிறுத்தி வைத்த வருவாய் | | | |
| **நடைமுறை அல்லாத பொறுப்பு** | | | |
| குத்தகைக் கடன்கொடுத்தோர் | | 652 | (01) |
| **நடைமுறைப் பொறுப்புக்கள்** | | | |
| வியாபார கொடுக்குமதிகள் | | 4 000 | |
| குத்தகைக் கடன்கொடுத்தோர் | | 595 | (01) |
| விற்பனை உத்தரவாத ஏற்பாடு | | 246/280 | (01) |
| செலுத்தவேண்டிய ஊழியர் சேமலாபநிதி(EPF) | | 250 | } (01) |
| செலுத்த வேண்டிய ஊழியர் நம்பிக்கை நிதி (ETF) | | 30 | |
| மொத்த பொறுப்பும் உரிமையும் | | 12 741 | |

குறிப்பு 02 ஆதனம் பொறி உபகரணங்களின் அசைவுக் கூற்று (ரூ 000)

| | நிலம் | மோட்டார் வாகனம் | அலுவலக உபகரணம் | மொத்தம் |
|---|---|---|---|---|
| செலவு | 6 000 | 3 000 | 1 000 | 10 000 |
| 2014.04.01 ல் மீதி | (1 500) | (01) | | (1 500) |
| மீள் மதிப்பீடு | 4 500 | 3 000 | 1 000 | 8 500 |
| 2015.03.31 ல் மீதி | | | | |
| பெறுமானத் தேய்வு ஏற்பாடு | | | | |
| 2014.04.01 ல் மீதி | - | 600 | 400 | 1 000 |
| இவ்வாண்டுத் தேய்வு | - | 600 (01) | 200 | 800 |
| 2015.03.31 ல் மீதி | - | 1 200 | 600 | 1 800 |
| 2015.03.31 கொண்டு செல் தொகை | 4 500 | 1 800 | 400 | 6 700 |

(01)



Download Past Papers at : www.freebooks.lk

1 ஆம் வினாவிற்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும்:




இவ்வினாவிற்காக ஒதுக்கப்பட்ட புள்ளிகளின் அளவு 20 x 2 = 40 ஆகும்.

1 ஆம் வினா கட்டாய வினாவாகும். ஒரு சிறிய தொகையினர் தவிர ஏனைய விண்ணப்பதாரர்கள் இதற்கு விடையளித்துள்ளனர். இவ்வினாவிற்கு ஒதுக்கப்பட்ட புள்ளிகள் 40 ஆகும்.

அதில் 00 - 10 புள்ளி வகுப்பாயிடையில் 31% ம்
11 - 20 புள்ளி வகுப்பாயிடையில் 24% ம்
21 - 30 புள்ளி வகுப்பாயிடையில் 27% ம்
31 - 40 புள்ளி வகுப்பாயிடையில் 18% ம்
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இவ்வினாவிற்கு 31 புள்ளிகள் அல்லது அதற்கு மேல் புள்ளிகளைப் பெற்றவர்களின் தொகை 18% என்பதுடன் விண்ணப்பதாரிகள் 31%மானோர் 10 அல்லது அதனையும் விடக் குறைவான புள்ளிகளையே பெற்றுள்ளனர்.




இவ்வினாவில் 3 உபபிரிவுகள் காணப்படுவதுடன் அம்மூன்று உபபிரிவுகளினதும் இலகுதன்மை 40% ஐ விடக் கூடுதலாகும். இலகுதன்மை குறைந்த உபபகுதியாக (1) காணப்படுவதுடன் அதன் இலகுதன்மை 42%மாகும். இலகுதன்மை கூடிய உபபிரிவாக (2) காணப்படுவதுடன், அதன் இலகுதன்மை 45% ஆகும்.

பகுதி (1) யின் இலகுதன்மை 42%மாக இருப்பதுடன், இதற்கான பிரதான காரணங்களாக அறிக்கைப்படுத்தப்பட்ட காலப்பகுதிக்குப் பின்னரான நிகழ்வுகளாக இருப்பின் பெறுமதி, விற்பனையின் பெறுமதி, உத்தரவாதச் சான்றிதழுக்கான ஏற்பாடு என்பவற்றை சரியாகக் கணிக்காமை, கணக்கீட்டு நியமம் இலக்கம் 16 இற்கேற்ப மீள்மதிப்பீடு தொடர்பான விளக்கம் குறைந்த மட்டத்தில் காணப்பட்டமை என்பவை காரணமாக இப்பகுதிக்குரிய புள்ளிகள் குறைவடைவடைந்திருந்தமையை இங்கு சுட்டிக் காட்டலாம். இவற்றில் கவனம் செலுத்தி கற்றல் - கற்பித்தல் செயன்முறைகள் ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.

பகுதி (2) உரிமை மாற்றல் கூற்றில் மொத்த விரிவான வருமானத்தை வேறுபடுத்திக் காட்டுவது தொடர்பில் சரியாக இனங்காண்பதில் விண்ணப்பதாரிகளிடம் பலவீனம் காணப்படுவது புலனாகின்றது. கற்றல் - கற்பித்தல் செயன்முறையினடாக இதற்குரிய விளக்கம் வழங்கப்படல் வேண்டும்.

பகுதி (3) இல் நிதி நிலமைக் கூற்றில் முற்பணமாக செலுத்திய வருமான வரியினை சரியாக இனங்காணாமை, உத்தரவாத சான்றிதழ்களுக்கான ஏற்பாட்டினை சரியாக இனங்கண்டிராமை, நிதிக்குத்தகையின் கீழ் கொள்வனவாளரின் ஏடுகளில் கணக்குவைப்பு மற்றும் நடைமுறை, நடைமுறையல்லாத பொறுப்புக்களாக குத்தகைக்கடன் கொடுநரை இனங்காணாமை போன்ற பலவீனங்கள் விண்ணப்பதாரிகளிடம் காணப்பவடுவது புலனாகின்றது. இது தொடர்பில் கூடுதலான விளக்கத்தை பெற்றுக்கொள்ளும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயன்முறைகள் ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.

> பிரசித்தப்படுத்துவதற்காகத் தயாரிக்கப்படுகின்ற நிதி அறிக்கைகளின் மாதிரி தொடர்பிலான விளக்கமானது தொடர்ந்தும் பலவீனமாகக் காணப்படுவதுடன் உரிய நியமங்கள் மாற்றமடைகின்றபோது நிதிக்கூற்றுக்களை முன்வைக்கும் மாதிரிகளில் ஏற்படுகின்ற மாற்றங்கள் தொடர்பில் மாணவர்களின் அறிவினை இற்றைப்படுத்தல் முக்கிமானதாகும்.




Download Past Papers at : www.freebooks.lk

## வினா இலக்கம் 02

**2.** **(அ)** அஜித், மஜித் ஆகியோர் 01.04.2014 இல் பங்குடைமையொன்றை ஆரம்பித்தனர். பங்குடைமை ஒப்பந்தத்தின் நிபந்தனைகள் பின்வருமாறு:

- இலாப நட்டங்கள் அஜித், மஜித் ஆகியோருக்கிடையில் 2:1 என்ற விகிதத்தில் பகிரப்படும்.
- ஒவ்வொரு பங்காளரும் மாதாந்தச் சம்பளமாக ரூ. 40 000 பெற உரித்துடையவர்.
- பங்காளர்கள் தமது மூலதனத்திற்கு வருடாந்தம் 10% வட்டி பெறுவதற்கு உரித்துடையவர்களாவர்.
- பங்காளரினால் வழங்கப்படும் கடன்களுக்கு வருடாந்தம் 6% வட்டி பெறுவதற்கு அவர்கள் உரித்துடையவர்களாவர்.
- பங்காளருடன் தொடர்புடைய எல்லாக் கொடுக்கல்வாங்கல்களும் அவர்களின் நடைமுறைக் கணக்குகள் ஊடாகப் பதியப்படும்.

31.03.2015 இல் பங்குடைமையின் பரீட்சைமீதி பின்வருமாறு:

| | வரவு (ரூ.'000) | செலவு (ரூ.'000) |
|---|---|---|
| ஆதனம், பொறி மற்றும் உபகரணங்கள் - கொண்டுசெல் தொகையில் | 4 800 | |
| ஆதனம், பொறி, மற்றும் உபகரணங்கள் பெறுமானத்தேய்வு | 600 | |
| வியாபார வருமதிகள் | 900 | |
| வங்கியிலுள்ள காசு | 130 | |
| மூலதன கணக்குகள் - அஜித் | | 1 800 |
| மஜித் | | 1 300 |
| 01.08.2014 இல் அஜித்தினால் வழங்கப்பட்ட கடன் | | 1 000 |
| வியாபாரக் கொடுக்குமதிகள் | | 340 |
| விற்பனைகள் | | 6 100 |
| கொள்வனவுகள் | 2 500 | |
| செயற்பாட்டுச் செலவுகள் | 820 | |
| அஜித்திற்குச் செலுத்திய சம்பளம் | 200 | |
| அஜித்தின் கடனுக்காக செலுத்திய வட்டி | 30 | |
| மஜித்திற்குச் செலுத்திய மூலதன வட்டி | 100 | |
| அஜித்திற்குச் செலுத்திய வாடகை | 100 | |
| புதிய அலுவலக இடத்திற்காக செலுத்திய வாடகை | 360 | |
| | **10 540** | **10 540** |

**மேலதிக தகவல்கள்:**

(i) இவ் வியாபாரமானது அஜித்திற்குச் சொந்தமான கட்டடத்தில் ஆரம்பிக்கப்பட்டது. இது தொடர்பாக அஜித்திற்கு வருடாந்த வாடகையாக ரூ. 240 000 செலுத்துதல் வேண்டும். எனினும் 01.10.2014 இல் இவ் வியாபாரமானது ரூ. 360 000 வருடாந்த வாடகையுடன் புதிய இடமொன்றுக்கு இடமாற்றம் செய்யப்பட்டதுடன் இத்திகதியில் இம் முழு வாடகைத் தொகையும் செலுத்தப்பட்டது.

(ii) சரக்கிருப்புப் பதிவேடுகளின்படி 31.03.2015 இல் சரக்கிருப்புக்களின் கிரயமானது ரூ. 250 000 ஆகும். எனினும் முறையே அஜித், மஜித் ஆகியோரால் பெறப்பட்ட ரூ. 30 000, ரூ. 20 000 கிரயமுள்ள பொருட்கள் சரக்கிருப்புப் பதிவேடுகளில் உள்ளடக்கப்பட்டிருக்கவில்லை.

(iii) 2015 ஏப்ரல் மாதத்தில் விநியோகம் செய்வதற்காக ஏற்றுக்கொள்ளப்பட்ட பொருட்களுக்காக வியாபாரத்தினால் பெறப்பட்ட முற்பணம் ரூ. 100 000 ஆனது நடைமுறை ஆண்டுக்கான விற்பனை எனப் பதிவிடப்பட்டுள்ளது.

(iv) பங்குடைமையின் எல்லாக் காசுக் கொடுக்கல்வாங்கல்களும் வங்கிக் கணக்கினூடாக மேற்கொள்ளப்படுகின்றன. 31.03.2015 இல் உள்ளவாறான வியாபாரத்தின் வங்கிக் கணக்கிலுள்ள மீதியும் வங்கிக் கூற்று மீதியும் ஒத்திருக்கவில்லை. இது தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட பரிசோதனையில் பின்வருவன தெரியவந்தன.

- வாடிக்கையாளர் ஒருவரினால் வங்கியில் ரூ. 40 000 காசோலையொன்று நேரடியாக வைப்புச் செய்யப்பட்டிருந்தது.
- வாடிக்கையாளர் ஒருவரிடமிருந்து பெறப்பட்ட ரூ. 60 000 காசோலையொன்று மறுக்கப்பட்டுள்ளது.
- வழங்குனரொருவருக்கு வழங்கப்பட்ட ரூ. 50 000 காசோலையொன்று கொடுப்பனவுக்காகச் சமர்ப்பிக்கப்படவில்லை.
- அஜித்தின் ஆயுள் காப்புறுதிக் கட்டணமாகச் செலுத்தப்பட்ட ரூ. 10 000 காசோலையொன்று வியாபாரத்தின் வங்கிக் கணக்கில் பதியப்பட்டிருக்கவில்லை.



Download Past Papers at : www.freebooks.lk

**வேண்டப்படுவது:**

(1) 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான பங்குடைமையின் வருமானக் கூற்று (பங்காளருக்கான பகிர்வுகள் உட்பட)

(2) 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான பங்காளர்களின் நடைமுறைக் கணக்குகள்

(3) 31.03.2015 இல் பங்குடைமையின் வங்கியிலுள்ள காசு, வியாபார வருமதிகள் ஆகியவற்றின் சரியான மீதிகள் **(10 புள்ளிகள்)**

02. (அ) (1) அஜித், மஜித் பங்குடமையின்

31/03/2015ல் முடிவடைந்த வருடத்திற்கான வருமானக் கூற்று (ரூ'000)

(ரூ'000)

| | | |
|---|---|---|
| விற்பனை | | 6 000 |
| விற்பனைக் கிரயம் | | |
| கொள்வனவு | 2 500 | |
| பற்று | (50) | (01) (2 250) |
| இறுதி இருப்பு | (200) | (01) |
| மொத்தலாபம் | | 3 750 |
| செயற்பாட்டுச் செலவுகள் | 820 | (01) |
| தேய்வு | 600 | |
| கட்டிட வாடகை | 300 | (01) |
| ஆதனம் பொறி உபகரண பெறுமானத்தேய்வு | 40 | (01) (1 760) |
| ஆண்டுக்கான இலாபம் | | 1 990 |
| மூலதனவட்டி - அஜித் | 180 | (01) |
| மஜித் | 130 | (310) |
| சம்பளம் - அஜித் | 480 | (01) |
| மஜித் | 480 | (960) |
| இலாபப்பகிர்வுய - அஜித் | (01) 480 | |
| மஜித் | 240 | (720) |

**(09 புள்ளிகள்)**

(2)

பங்காளர் நடைமுறைக் கணக்கு (ரூ'000)

| | அஜித் | மஜித் | | அஜித் | மஜித் |
|---|---|---|---|---|---|
| சம்பளம் | 200 | - | (01) மூலதன வட்டி | (01) 180 | 130 |
| மூலதன வட்டி | - | 100 | சம்பளம் | 480 | 480 |
| வாடகை | 100 | - | இலாபம் (01) | 480 | 240 |
| கடன் வட்டி | 30 (01) | - | கடன் வட்டி | 40 | (01) |
| பற்றுக்கள் | 30 | 20 | வாடகை | 120 | (01) |
| ஆயுள் காப்புறுதி | 10 (01) | - | | | |
| மீதி கீ/கொ/செ | 930 | 730 | | | |
| | 1 300 | 850 | | 1 300 | 850 |

**(07 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

(3) வங்கியிலுள்ள காசு ரூபா 100 000 (03)

வியாபார வருமதிகள் ரூபா 920 000 (01) **(04 புள்ளிகள்)**

| செய்கை ரூபா'000 | | | வியா. கிடைக்வேண்டியவை | |
|---|---|---|---|---|
| **வங்கி மீதி** | | | முன்கொண்டு வரப்பட்ட மீதி | 900 |
| முன்கொண்டு வழங்கப்பட்ட மீதி | 130 | | மறுக். காசோலை | 60 |
| கடன்பட். நேரடி வைப்பு | 40 | 01 | நேரடி வைப்பு | (40) |
| மறுக். காசோலை | (60) | 01 | | |
| அஜித் பற்று | (10) | 01 | | |
| | 100 | | | 920 |

**(ஆ)** கம்பனியொன்றில் ஒன்றுசேர்த்தல், முடிவுறுத்தல் என இரண்டு உற்பத்திப் பகுதிகளும் பராமரிப்பு என்ற சேவைப் பகுதியும் காணப்படுகிறது. இவ் உற்பத்திப் பகுதிகள் ஒரே இடத்தில் காணப்படுவதுடன் பராமரிப்புப் பகுதியானது வேறோர் இடத்தில் காணப்படுகிறது. **இரண்டு உற்பத்திப் பகுதிகளுக்குமான** பின்வரும் பூரணப்படுத்தப்படாத மேந்தலைப் பகுப்பாய்வு அட்டவணை தயாரிக்கப்பட்டுள்ளது.

| மேந்தலைகள் | பகிர்தலுக்கான அடிப்படை | மொத்தம் (ரூ.'000) | ஒன்றுசேர்த்தல் (ரூ.'000) | முடிவுறுத்தல் (ரூ.'000) |
|---|---|---|---|---|
| ஒதுக்கப்பட்ட உற்பத்தி மேந்தலைகள் | நேர் | 9 800 | 5 000 | 4 800 |
| உற்பத்தி முகாமையாளர் சம்பளம் | | 6 000 | | |
| வாடகை | | 4 800 | | |
| மின்சாரம் | | 2 400 | | |
| இயந்திர பெறுமானத்தேய்வு | | 6 000 | | |
| ஊழியர் நலன்புரிச் செலவுகள் | | 3 000 | | |

**மேலதிக தகவல்கள்:**

(i) ஒன்றுசேர்த்தல், முடிவுறுத்தல் பகுதிகளுக்கிடையில் மேந்தலைகளைப் பகிர்வதற்கான அடிப்படை:

- உற்பத்தி முகாமையாளர் சம்பளமானது சமமாகப் பகிரப்படும்.
- ஏனைய அடிப்படைகள்:

| விபரம் | ஒன்றுசேர்த்தல் | முடிவுறுத்தல் | மொத்தம் |
|---|---|---|---|
| தளப்பரப்பு (சதுர மீற்றர்) | 20 000 | 10 000 | 30 000 |
| கிலோவாற் மணித்தியாலங்கள் | 40 000 | 20 000 | 60 000 |
| இயந்திரத்தின் பெறுமதி (ரூ.'000) | 50 000 | 10 000 | 60 000 |
| ஊழியர்களின் எண்ணிக்கை | 50 | 100 | 150 |
| பராமரிப்பு மணித்தியாலங்கள் | 20 000 | 80 000 | 100 000 |

(ii) பராமரிப்புப் பகுதிக்கு ஒதுக்கப்பட்டுள்ள மொத்த மேந்தலைகள் ரூ. 6 000 000 ஆகும். இது பராமரிப்பு மணித்தியாலங்களின் அடிப்படையில் இரண்டு உற்பத்திப் பகுதிகளுக்குமிடையே பகிரப்பட வேண்டும்.

(iii) மேந்தலைகளை உறிஞ்சுவதற்கு, ஒன்றுசேர்த்தல் பகுதியும் முடிவுறுத்தல் பகுதியும் முறையே இயந்திர மணித்தியாலங்களையும் ஊழிய மணித்தியாலங்களையும் பயன்படுத்துகிறது. ஒன்றுசேர்த்தல் பகுதிக்கான பாதிடப்பட்ட இயந்திர மணித்தியாலங்கள் 400 000 ஆகவும் முடிவுறுத்தல் பகுதிக்கான பாதிடப்பட்ட ஊழிய மணித்தியாலங்கள் 200 000 ஆகவும் உள்ளன.



Download Past Papers at : www.freebooks.lk

(iv) பின்வரும் தகவல்கள் கம்பனியால் உற்பத்தி செய்யப்படும் உற்பத்திப் பொருள் 'A' உடன் தொடர்பானவை.

| | |
|---|---|
| பாதிடப்பட்ட உற்பத்தி | 1 000 அலகுகள் |
| அலகிற்கான விற்பனை விலை | ரூ. 2 500 |
| அலகிற்கான மூலக்கிரயம் | ரூ. 500 |
| அலகொன்றை உற்பத்தி செய்வதற்கான பாதிடப்பட்ட மணித்தியாலங்கள்: | |
| - இயந்திர மணித்தியாலங்கள் | 3 |
| - ஊழிய மணித்தியாலங்கள் | 5 |
| பாதிடப்பட்ட உற்பத்தியல்லா மேந்தலைகள்: | |
| - அலகிற்கான மாறும் மேந்தலைகள் | ரூ. 300 |
| - நிலையான மேந்தலைகள் | ரூ. 400 000 |

**வேண்டப்படுவது:**

(1) இரண்டு உற்பத்திப் பகுதிகளுக்குமான பூரணப்படுத்தப்பட்ட மேந்தலைப் பகுப்பாய்வு அட்டவணை

(2) ஒவ்வோர் உற்பத்திப் பகுதிகளுக்குமான மேந்தலை உறிஞ்சல் வீதங்கள்

(3) உற்பத்திப் பொருள் 'A' இற்கான எதிர்பார்க்கப்படும் இலாபம் அல்லது நட்டத்தைக் காட்டக்கூடியதான கூற்று

**(10 புள்ளிகள்)**

**(மொத்தம் 20 புள்ளிகள்)**

(ஆ) (1) மேந்தலைப் பகுப்பாய்வு அட்டவணை ரூ' 000

| கிரய உருப்படி | பகிர்வின் அடிப்படை | மொத்தம் | உற்பத்தி திணைக்களம் | | சேவை திணைக் களம் |
|---|---|---|---|---|---|
| | | | ஒன்று சேர்த்தல் | முடிவுறுத்தல் | பராமரிப்பு |
| ஒதுக்கப்பட்ட உற்பத்தி மேந்தலை | நேர் | 15 800 | 5 000 | 4 800 | 6 000 |
| உற்பத்தி முகாமையாளர் சம்பளம் | சமன் (1:1) (01) | 6 000 | 3 000 | 3 000 | (01) |
| வாடகை | தளப்பரப்பு (2:1) (01) | 4 800 | 3 200 | 1 600 | (01) |
| மினசாரம் | கிலோ வற் (2:1) (01) | 2 400 | 1 600 | 800 | (01) |
| இயந்திர பெறுமானத்தேய்வு | இயந்திர கிரயம் (5:1) (01) | 6 000 | 5 000 | 1 000 | (01) |
| ஊழியர் நலன்புரிச் செலவு | ஊழியர் எண்ணிக்கை (1:2) | 3 000 | 1 000 | 2 000 | (01) |
| | | 38 000 | 18 800 | 13 200 | |
| பராமரிப்பு | பராமரிப்பு மணித்தியாலம் | | | | 6 000 |
| | (1:4) | | 1 200 | 4 800 | (01) (6 000) |
| | | 38 000 | 20 000 | 18 000 | - |

**(10 புள்ளிகள்)**

(2)

| | ஒன்று சேர்த்தல் | ஒன்று சேர்த்தல் |
|---|---|---|
| பொது மேந்தலை கிரயம் | இயந்திர மணித்தியாலத்திற்கு | ஊழிய மணித்தியாலத்திற்கு |
| வீதங்கள் | ரூ. 50 (02) | ரூ. 90 (02) |

**(04 புள்ளிகள்)**

செய்கை

| | |
|---|---|
| [01] 20 000 | [01] 18 000 |
| 400 [01] | 200 [01] |
| ரூ. 50 (02) | ரூ. 90 (02) |



Download Past Papers at : www.freebooks.lk

(3) உற்பத்திப் பொருள் A இற்கான எதிர்பார்க்கும் இலாபம் அல்லது நட்டத்தினை காட்டும் கூற்று

| | | | ரூ.'000 | |
|---|---|---|---|---|
| விற்பனை | | | 2 500 | (01) |
| மூலக் கிரயம் | | | (500) | (01) |
| உறிஞ்சப்பட்ட மேந்தலை | | | | |
| ஒன்று சேர்த்தல் | 50 x 3 | (01) | (150) | |
| முடிவுறுத்தல் | 90 x 5 | (01) | (450) | |
| உற்பத்தியல்லா மேந்தலை | | | | |
| - மாறும் மேந்தலைகள் | | | (300) | (01) |
| - நிலையான மேந்தலை | 400 000 | | | |
| | 1 000 | | (400) | (01) |
| எதிர்பார்க்கும் இலாபம் | | | 700 | |

**(06 புள்ளிகள்)**
**(மொத்தம் 40 புள்ளிகள்)**

**2 ஆம் வினாவிற்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும்:**




இவ்வினாவிற்காக ஒதுக்கப்பட்ட புள்ளிகளின் அளவு 20 x 2 = 40 ஆகும்.
2 ஆம் வினா கட்டாய வினாவாயினும் அதற்கு விண்ணப்பதாரிகளில் 99% மானோர் மாத்திரமே விடையளித்துள்ளனர்.
அதில் 00 - 10 புள்ளி வகுப்பாயிடையில் 20% ம்
11 - 20 புள்ளி வகுப்பாயிடையில் 20% ம்
21 - 30 புள்ளி வகுப்பாயிடையில் 28% ம்
31 - 40 புள்ளி வகுப்பாயிடையில் 32% ம்
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். அதற்கேற்ப 31 புள்ளிகள் அல்லது அதற்கு மேல் புள்ளிகளைப் விண்ணப்பதாரிகளில் 32% மானோர் பெற்றுள்ளதுடன், விண்ணப்பதாரிகளில் 20%மானோர் 10 அல்லது அதனையும் விடக் குறைவான புள்ளிகளையே பெற்றுள்ளனர்.



Download Past Papers at : www.freebooks.lk




6 உபபிரிவுகளைக் கொண்டுள்ள இவ்வினாவின் இலகுதன்மை 47% த்தை விட அதிகமாகும். இலகுதன்மை கூடிய உபபகுதியாக (ஆ) (2) காணப்படுவதுடன் அதன் இலகுதன்மை 71% ஆகும். இலகுதன்மை குறைவான உபபிரிவு (அ) 2 ஆகும். அதன் இலகுதன்மை 47% ஆகும்.

2 ஆம் வினாவின் (அ) (1) பகுதியின் இலகுதன்மை 52% மாகும். பெரும்பாலான விண்ணப்பதாரிகள் வருமானக் கூற்றில் விற்பனையை சரியாக கணித்திருக்கவில்லை. பங்காளரினால் மேற்கொள்ளப்பட்ட பொருள்பற்றுக்கள் கழிக்கப்படாமை, கடன்வட்டி மற்றும் கட்டட வாடகை என்பவற்றை சரியாக சீராக்கம் செய்யாமை போன்ற பலவீனங்களை இங்கு காணக்கூடியதாக இருந்தது.

(அ) 2 பகுதியின் இலகுதன்மை 47% மாகும். பங்காளருக்குரிய மூலதன வட்டி, சம்பளம், செலுத்திய மூலதன வட்டி, செலுத்திய சம்பளம் என்பவற்றை உரியமுறையில் சீராக்கம் செய்வதற்கான அறிவு விண்ணப்பதாரிகளிடம் கீழ் மட்டத்தில் காணப்படுவதை இங்கு அறியமுடிகின்றது. அஜித்திற்குரிய கட்டட வாடகையைச் சரியாகக் கணிப்பிட்டு சீராக்கம் செய்யாமை, அஜித்தின் தனிப்பட்ட ஆயுள் காப்புறுதித் தவணைக் கட்டணத்தை நடைமுறைக் கணக்கில் சீராக்கம் செய்யாமை என்பவையே புள்ளிகள் குறைவடைவதற்கான காரணங்களாகும்.

(அ) 3 பகுதியின் இலகுதன்மை 59% மாகும். விண்ணப்பதாரிகளில் பெரும்பாலானோர் வங்கி கணக்கிணக்கக் கூற்றைத் தயாரிப்பதற்கு முயற்சி எடுத்துள்ளனர். காசு மீதியினைக் கணிக்கும்போது மறுக்கப்பட்ட காசோலை தொடர்பில் கவனம் செலுத்தியிருக்கவில்லை. வியாபார கிடைக்க வேண்டிய மீதியினைக் கணிப்பிடும்போது மறுக்கப்பட்ட காசோலை மற்றும் நேரடிவைப்பு என்பவற்றைக் கவனத்தில் எடுக்காமை இங்குள்ள குறைபாடுகளாகும்.

பங்காளருக்குரிய மூலதனவட்டி மற்றும் சம்பளம் என்பவற்றுடன் அவர்களுக்கு செலுத்தவேண்டிய ஏனைய கொடுப்பனவுகளான கட்டட வாடகை, கடன்வட்டி போன்றவற்றை கணக்குகளில் பதிவுசெய்யவேண்டிய முறைகள், அவற்றில் செலுத்திய தொகைகளை கணக்கு வைக்க வேண்டிய முறைகள் என்பன தொடர்பிலான அறிவு விண்ணப்பதாரிகளிடம் போதுமானளவு காணப்படாமையை இங்கு அறியக்கூடியதாக இருப்பதனால் அது தொடர்பிலான அறிவினையும் மற்றும் பயன்பாட்டினையும் கற்றல் - கற்பித்தல் செயன்முறையினூடாக பெற்றுக் கொடுத்தல் வேண்டும்.

(ஆ) 1 பகுதியின் இலகுதன்மை 66%மாகும். பெரும்பாலான மாணவர்கள் பொது மேந்தலைக் கிரய பகுப்பாய்வு அட்டவணையை சரியாக தயாரித்திருந்தனர். சில மாணவர்களுக்கு ஒதுக்குதல் அடிப்படையினை இனம் காண முடியாதிருந்தமை இங்கு காணக்கூடிய விடயமொன்றாகும்.

(ஆ) 2 பகுதியின் இலகுதன்மை 71%மாகும். இந்தளவு இலகுதன்மை ஏற்பட்டமைக்குக் காரணம் விண்ணப்பதாரி பெற்ற தொகையினை உரிய பெறுமதியினால் வகுத்துக் காட்டியிருந்தமையினாலாகும். பெரும்பாலான விண்ணப்பதாரிகளுக்கு சரியான தொகையினை கணிக்க முடியாமல் போயிருந்தது.

(ஆ) 3 பகுதியின் இலகுதன்மை 52%மாகும். உற்பத்தி பொது மேந்தலைக் கிரயத்தை பெற்ற தொகையின் அடிப்படையில் கணிப்பிட்டமையினால் அதற்கு புள்ளி வழங்கவேண்டி ஏற்பட்டது. இலாபத்தைக் கணிப்பிடும்போது உற்பத்தியல்லாத பொது மேந்தலைக்கிரயத்தை நிலையான மற்றும் மாறும் என வேறுபடுத்தி இனம் காண்பதற்கு பெரும்பாலான மாணவர்களுக்கு முடியாமலிருந்தது. மாணவர்களுக்கு பொது மேந்தலைக் கிரயத்தை உற்பத்தி, உற்பத்தியல்லாதது என்ற வகையில் இனம் காணக்கூடியதாக கற்றல் - கற்பித்தல் செயன்முறைகள் ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.


Download Past Papers at : www.freebooks.lk

03 ஆம் வினா

**3.** 01.03.2015 இல் நந்தினி தனது வீட்டின் ஒரு பகுதியில் ரூ. 150 000 ஐ காசாக முதலிட்டு எழுதுகருவிகள் வியாபாரத்தை ஆரம்பித்தார். மேலும் இத்தினத்தில் அவர் வியாபாரத்தின் பாவனைக்காக ரூ. 60 000 பெறுமதியான தளபாடங்களையும் கொண்டு வந்தார். அவர் வியாபாரத்தின் பெயரில் வங்கிக் கணக்கொன்றை ஆரம்பித்து எல்லாக் காசுக் கொடுக்கல்வாங்கல்களையும் இவ் வங்கிக் கணக்கினூடாகவே மேற்கொண்டார். முதல் மாத வியாபாரச் செயற்பாட்டினால் பின்வரும் கொடுக்கல்வாங்கல்கள் ஏற்பட்டன.

| கொடுக்கல்வாங்கல் இல. | கொடுக்கல்வாங்கல் |
|---|---|
| 1 | எழுதுகருவிகள் ரூ. 100 000 இற்கு காசுக்குக் கொள்வனவு செய்யப்பட்டன. |
| 2 | ரூ. 70 000 கிரயம் கொண்ட எழுதுகருவிகள் ரூ. 100 000 இற்கு காசுக்கு விற்பனை செய்யப்பட்டன. |
| 3 | எழுதுகருவிகள் ரூ. 150 000 இற்கு கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்டன. |
| 4 | ரூ. 30 000 பெறுமதியான எழுதுகருவிகள் பழுதடைந்து காணப்பட்டதால் வழங்குனருக்குத் திருப்பி அனுப்பப்பட்டன. |
| 5 | 15.03.2015 இல் கணனியொன்று ரூ. 120 000 இற்கு கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்டது. இத்தொகை 18 மாதங்களுள் செலுத்தப்படல் வேண்டும். |
| 6 | ரூ. 100 000 கிரயமுள்ள எழுதுகருவிகள் ரூ. 140 000 இற்கு கடனுக்கு விற்பனை செய்யப்பட்டன. |
| 7 | அலுவலக உதவியாளருக்கு மாதச் சம்பளமாக ரூ. 15 000 செலுத்தப்பட்டது. |
| 8 | நந்தினி, தனது சொந்தத் தேவைக்காக வியாபாரத்திடமிருந்து ரூ. 30 000 ஐப் பெற்றுக்கொண்டார். |
| 9 | எழுதுகருவிகள் வழங்குனருக்குச் செலுத்த வேண்டிய மீதிகள் 5% கழிவுடன் தீர்க்கப்பட்டன. |
| 10 | கடன்பட்டோரிடமிருந்து வருமதியான தொகைகள் 5% கழிவு அனுமதிக்கப்பட்டு பெறப்பட்டன. |

**மேலதிக தகவல்கள்:**

- 2015 மார்ச் மாதத்திற்குரிய ரூ. 3 000 தொகைக்கான வியாபாரத்தின் தொலைப்பேசிக் கட்டணப் பட்டியல் 02.04.2015 இல் பெறப்பட்டது.
- வியாபாரத்தின் ஆதனம், பொறி, உபகரணம் ஆகியவற்றுக்கு நேர்கோட்டு முறையில் கிரயத்தில் 20% வருடாந்தம் பெறுமானத்தேய்விடல் வேண்டும்.

**வேண்டப்படுவது:**

(1) இல. 1 இலிருந்து 10 வரையிலான மேற்படி கொடுக்கல்வாங்கல்களின் விளைவுகளை (பெறுமதியுடன்) கணக்கீட்டுச் சமன்பாட்டினைப் பயன்படுத்திக் காட்டுவதுடன், ஒவ்வொரு பெறுமதியும் அதிகரிப்பின் (+) எனவும் குறைவடைவின் (–) எனவும் அதன் எதிரே குறிப்பிடுக.
(இதற்காகப் பின்வரும் மாதிரி அமைப்பினைப் பயன்படுத்துக.) **ரூ.'000**

| கொடுக்கல் வாங்கல் இல. | சொத்துக்கள் | | | | பொறுப்புக்கள் | | உரிமை-யாண்மை |
|---|---|---|---|---|---|---|---|
| | ஆதனம், பொறி, உபகரணம் | சரக்கிருப்புகள் | வியாபார வருமதிகள் | வங்கி | வியாபாரக் கொடுக்குமதிகள் | கடன்கள் | |
| | | | | | | | |

(2) 31.03.2015 இல் முடிவடைந்த மாதத்திற்கான வியாபாரத்தின் வருமானக் கூற்று

(3) கீழே தரப்பட்டுள்ள மாதிரியைப் பயன்படுத்தி 31.03.2015 இல் உள்ளவாறான உரிமையாண்மையின் உள்ளடக்கம்

**ரூ.'000**

| | |
|---|---|
| ஆரம்ப மூலதனம் | |
| காலப்பகுதிக்கான இலாபம்/(நட்டம்) | |
| கழி: பற்றுக்கள் | |
| 31.03.2015 இல் உள்ளவாறான உரிமையாண்மை | |

**(மொத்தம் 15 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**(3) (1)**

| கொடுக்கல் வாங்கல் இல. | சொத்துக்கள் | | | பொறுப்புக்கள் | | | உரிமையாண்மை | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | ஆதனம் பொறி உபகரணம் | சரக்கிருப்புக்கள் | வியாபார வருமதிகள் | வங்கி | வியாபார கொடுக்குமதிகள் | கடன்கள் | | |
| 1 | | +100 000 | | -100 000 | | | | (01) |
| 2 | | -70 000 | | +100 000 | | | +30 000 | (02) |
| 3 | | +150 000 | | | +150 000 | | | (01) |
| 4 | | -30 000 | | | -30 000 | | | (01) |
| 5 | +120 000 | | | | | +120 000 | | (02) |
| 6 | | -100 000 | +140 000 | | | | +40 000 | (02) |
| 7 | | | | -15 000 | | | -15 000 | (01) |
| 8 | | | | -30 000 | | | -30 000 | (01) |
| 9 | | | | -114 000 | -120 000 | | +6 000 | (02) |
| 10 | | | -140 000 | +133 000 | | | -7 000 | (02) |

**(15 புள்ளிகள்)**

**(2)**

31.03.2015ல் முடிவடைந்த மாதத்திற்கான வருமானக் கூற்று
ரூபா’000

| | | |
|---|---|---|
| விற்பனை | | 240 000 (01) |
| விற்பனைக் கிரயம் | | |
| கொள்வனவு | 250 000 (01) | |
| வெளிதிரும்பல் | (30 000) (01) | |
| இறுதி இருப்பு | (50 000) (01) | (170 000) |
| மொத்த இலாபம் | | 70 000 |
| பெற்ற கழிவு | | 6 000 (01) |
| செலவு | | |
| உதவியாளர் சம்பளம் | 15 000 (01) | |
| கொடுத்த கழிவு | 7 000 (01) | |
| தொலைபேசிக் கட்டணம் | 3 000 (01) | |
| தளபாட பெறுமானத் தேய்வு | 1 000 (01) | |
| கணணி பெறுமானத் தேய்வு | 1 000 (01) | (27 000) |
| தேறிய இலாபம் | | (01) 49 000 |

**(11 புள்ளிகள்)**

**(3)**

| | ரூ’ 000 |
|---|---|
| ஆரம்ப மூலதனம் | 210 (02) |
| காலப்பகுதிக்கான இலாபம் | (01) 49 |
| பற்றுக்களீ | (30) (01) |
| 2015.03.31இல் உரிமையாண்மை | 229 |

**(04 புள்ளிகள்)**
**(மொத்தம் 30 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**3 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புகளும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




இவ்வினாவிற்காக ஒதுக்கப்பட்ட புள்ளிகளின் அளவு 15 x 2 = 30 ஆகும்.
3 ஆம் வினா விண்ணப்பதாரிகளுள் 95%மாணவர்கள் மட்டுமே தெரிவு செய்துள்ளனர்.
அதில் 00 - 07 புள்ளி வகுப்பாயிடையில் 13% ம்
08 - 15 புள்ளி வகுப்பாயிடையில் 20% ம்
16 - 23 புள்ளி வகுப்பாயிடையில் 27% ம்
24 - 30 புள்ளி வகுப்பாயிடையில் 40% ம்
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இதற்கமைய இவ்வினாவிற்காக புள்ளிகள் 24 அல்லது அதிலும் கூடிய புள்ளிகளைப் பெற்றுள்ளவர்களின் எண்ணிக்கை 40% மாக இருப்பதுடன் புள்ளிகள் 7 அல்லது அதிலும் குறைவாகப் பெறப்பட்ட மாணவர் பிரிவினர் விண்ணப்பதாரிகளுள் 13% மாகும்.




இவ்வினாவிற்குரிய உபபிரிவுகள் 3 இல் இலகுதன்மை கூடிய பகுதி (3) ஆக இருப்பதுடன் அதன் இலகுதன்மை 79% ஆகும். அதே போன்று இலகுதன்மை குறைவான பகுதி (2) ஆக இருப்பதுடன் அதன் இலகுதன்மை 51% ஆகும்.

(3) (1) ஆவது பகுதியின் இலகுதன்மை 59% மாகும். கடன் கொடுத்தோர்களுக்கும் பணம் செலுத்துகின்றபோது பெற்ற கழிவானது பொறுப்பினைக் குறைக்கும் விடயமொன்றாகும் என சில விண்ணப்பதாரிகளால் இனங்காண முடியாதிருந்தது. அதே போன்று கடன்பட்டோரிடமிருந்து பணம் கிடைக்கும்போது கொடுத்த கழிவானது சொத்தொன்றின் குறைவை ஏற்படுத்தம் விடயம் என்பதையும் விளங்கியிருக்கவில்லை.

நடைமுறைச் சொத்தொன்று கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்டிருந்ததுடன் அப்பொருளானது நடைமுறைப் பொறுப்பா அல்லது நடைமுறை அல்லாத பொறுப்பா என்பதைத் தெளிவாக இனங்காணாதிருந்தனர்.

(2) ஆவது பகுதியின் இலகுதன்மை 51%மாகும். மேலதிகத் தகவல்களைப் பயன்படுத்தி ஆதனம் பொறி உபகரணங்களின் பொறுமானத் தேய்வுக் கணிப்பிடுவதை அனேக விண்ணப்பதாரிகளினால் இனங்காண முடியாதிருந்தது.

(3) ஆவது பகுதியின் இலகுதன்மை 79% மாகும். இங்கு உரிமையைக் கணிப்பிடுவதற்குரிய மாதிரியொன்று வழங்கப்பட்டிருந்தமை விண்ணப்பதாரிகளுக்கு இலகுவனதாக அமைந்திருந்தது.




Download Past Papers at : www.freebooks.lk

04 ஆம் வினா

**4.** **(அ)** பின்வரும் தகவல்கள் கம்பனியொன்று பயன்படுத்தும் மூலப்பொருளொன்றுடன் தொடர்பானவையாகும்.

(i) 2015 மார்ச் மாதத்திற்கான இருப்புப் பேரேட்டின் சுருக்கம்:

| **திகதி** | **விபரம்** | **தொகை (அலகுகள்)** | **அலகொன்றின் விலை (ரூ.)** |
|---|---|---|---|
| 01.03.2015 | மீதி | 4 000 | 12 |
| 10.03.2015 | கொள்வனவுகள் | 8 000 | 15 |
| 20.03.2015 | வழங்கல்கள் | 7 000 | ? |
| 25.03.2015 | கொள்வனவுகள் | 8 000 | 20 |
| 31.03.2015 | மீதி | 13 000 | |

(ii) கம்பனி சரக்கிருப்பு வழங்கல்களை விலையிடுவதற்கு நிறையளிக்கப்பட்ட சராசரி முறையை பயன்படுத்துகிறது.

(iii) ஏனைய தகவல்கள்:

| | **பாவனை (அலகுகள்/மாதம்)** | **விநியோகக் காலம் (மாதங்கள்)** |
|---|---|---|
| ஆகக் கூடியது | 3 000 | 4 |
| ஆகக் குறைந்தது | 1 000 | 2 |

**வேண்டப்படுவது:**

(1) மறுகட்டளைத் தொகை
(2) 20.03.2015 இல் வழங்கப்பட்ட சரக்கிருப்பின் பெறுமதி
(3) மீள் கட்டளை மட்டம்
(4) ஆகக் கூடிய இருப்பு மட்டம்
(5) ஆகக் குறைந்த இருப்பு மட்டம்

**(05 புள்ளிகள்)**

04. (அ) (1) ரூ. 8 000 (01)

(2) ரூ. 98 000 (03)

செய்கை : 01

$\frac{168\,000}{12}$ 01 = 14 × 7 000 01

(3) ரூ. 12 000 (01)

செய்கை :
ஆகக்கூடிய பாவனை × ஆகக்கூடிய விநியோக காலம்
3 000 × 4

(4) ரூ. 18 000 (03)

செய்கை :
மறுகட்டளை மட்டம் + மறுகட்டளை தொகை - இழிவு பாவனை × இழிவு விநியோகக் காலம்
01 12 000 + 01 8 000 - 1 000 × 2 01
20 000 - 2 000

(5) ரூ. 6 000 (02)

செய்கை :
மறுகட்டளை மட்டம் + (சராசரி பாவனை × சராசரி விநியோகக் காலம்)
12 000 - 1 000 × 2 01
12 000 - 6 000

(1 புள்ளி)



Download Past Papers at : www.freebooks.lk

(ஆ) சிறிதரன் தனது சொந்த சேமிப்பிலிருந்து ரூ. 600 000 ஐ முதலிட்டு 01.03.2015 இல் வியாபாரமொன்றை ஆரம்பித்தார். 2015 மார்ச் மாதத்தில் இடம்பெற்ற கொடுக்கல்வாங்கல்களின் சுருக்கம் கீழே தரப்பட்டுள்ளது.

(i) காசுப் பெறுவனவுகளும் கொடுப்பனவுகளும்:

| | ரூ. ' 000 |
|---|---|
| **பெறுவனவுகள்:** | |
| விற்பனைகள் | 1 800 |
| கடன்பட்டோரிடமிருந்து பெற்ற காசு | 5 600 |
| **கொடுப்பனவுகள்:** | |
| கொள்வனவுகள் | 1 200 |
| கடன்கொடுத்தோருக்குச் செலுத்திய காசு | 3 400 |
| செலவுகள் | 1 400 |

(ii) கடன்கொடுத்தோரிடமிருந்து ரூ. 400 000 காசுக்கழிவு பெற்றுக்கொள்ளப்பட்டதுடன் கடன்பட்டோருக்கு ரூ. 200 000 காசுக் கழிவு கொடுக்கப்பட்டுள்ளது.

(iii) ஏனைய ஆரம்பப்பதிவுப் புத்தகங்களின் மொத்தங்கள் பின்வருமாறு:

| **ஆரம்பப்பதிவேடு** | **மொத்தம் (ரூ. ' 000)** |
|---|---|
| கொள்வனவு நாளேடு | 10 800 |
| விற்பனை நாளேடு | 10 000 |
| கொள்வனவுத் திரும்பல் நாளேடு | 300 |
| விற்பனைத் திரும்பல் நாளேடு | 200 |

(iv) 31.03.2015 இல் கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கினதும் கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கினதும் மீதிகள் அவற்றின் துணைப் பேரேட்டுக் கணக்குகளின் மீதிகளின் மொத்தங்களுடன் ஒத்திருக்கவில்லை. இது தொடர்பான பரிசீலனையின்போது பின்வருவன தெரியவந்தன:

1. கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்ட ரூ. 1 800 000 லொறியொன்று கொள்வனவு நாளேட்டில் பதியப்பட்டுள்ளது.
2. இம் மாதத்தில் பதிவழிக்கப்பட்ட ரூ. 100 000 அறவிடமுடியாக்கடனானது கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் பதிவிடப்பட்டிருக்கவில்லை.
3. விற்பனைத் திரும்பல் நாளேட்டின் மொத்தத் தொகையான ரூ. 200 000, கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் ரூ. 2 000 000 எனப் பதிவிடப்பட்டுள்ளது.

**வேண்டப்படுவது:**

(1) 2015 மார்ச் மாதத்திற்கான காசுப் பெறுவனவு நாளேடும் காசுக் கொடுப்பனவு நாளேடும்

(2) வழுக்களைத் திருத்துவதற்கான நாட்குறிப்புப் பதிவுகள் (*விளம்பல் அவசியமானது*)

(3) வழுக்களைத் திருத்திய பின்னரான கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கும் கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கும் ***(10 புள்ளிகள்)***

***(மொத்தம் 15 புள்ளிகள்)***

(அ) (1) காசுப் பெறுவனவு நாளேடு

| திகதி | விபரம் | கழிவு | காசு | பெறுவனவு பகுப்பாய்வு | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | விற்பனை | கடன் பட்டோர் | ஏனையவை |
| | மூலதனம் | | 600 | - | - | 6 00 (01) |
| | விற்பனைகள் | | 1 800 | 1 800 (01) | - | - |
| | கடன்பட்டோர் | 200 | 5 600 | - | 5 600 (01) | |
| | | 200 | 8 000 | 1 800 | 5 600 | 6 00 |



Download Past Papers at : www.freebooks.lk

காசுக் கொடுப்பனவு நாளேடு

| திகதி | விபரம் | கழிவு | காசு | கொடுப்பனவு பகுப்பாய்வு | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | விற்பனை | கடன் கொடுநர் | ஏனையவை |
| | கொள்வனவு | - | 1 200 | 1 200 (01) | - | - |
| | கடன் கொடுத்தோர் | 400 | 3 400 | - | 3 400 (01) | - |
| | செலவுகள் | - | 1 400 | - | - | 1 400 (01) |
| | | 400 | 6 000 | 1 200 | 3 400 | 1 400 |

**(06 புள்ளிகள்)**

(2) நாட்குறிப்புப் பதிவுகள் ரூ'000

| | வரவு | செலவு | |
|---|---|---|---|
| கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு வரவு<br>கொள்வனவுக் கணக்கு செலவு<br>(கடன் கொள்வனவு செய்யப்பட்ட லொறி 1800 கொள்வனவு நாளேட்டில் பதியப்பட்டது திருத்தியது) | 1 800 | 1 800 | (02) |
| மோட்டார் வாகனக் கணக்கு வரவு<br>மோட்டார் கடன் கணக்கு செலவு<br>(லொறிக் கொள்வனவு திருத்திப் பதியப்பட்டது) | 1 800 | 1 800 | (02) |
| தொங்கல் கணக்கு வரவு<br>கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு செலவு<br>( அறவிடமுடியாக்கடனாக பதிவழிக்கப்பட்டது கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக்கணக்கில் பதியப்படாதது திருத்தப்பட்டது) | 100 | 100 | (02) |
| கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு வரவு<br>தொங்கல் கணக்கு செலவு<br>(விற்பனைத் திரும்பல் நாளேட்டின் மொத்தம் 200 000 கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் 2 000 000 என பதியப்பட்ட வழு திருத்தப்பட்டது) | 1 800 | 1 800 | (02) |

**(08 புள்ளிகள்)**

(3) கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு ரூபா'000

| | | | |
|---|---|---|---|
| கொள்வனவு | 1 800 (01) | மீதி/கீ/கொ/வ | 6 700 (02) |
| மீதி/கீ/கொ/செ | 4 900 | | |
| | 6 700 | | 6 700 |
| | | மீதி/கீ/கொ/வ | 4 900 |



Download Past Papers at : www.freebooks.lk

செய்கை -

| | | | |
|---|---|---|---|
| * வெளித்திரும்பல் | 300 | * கொள்வனவு | 10 800 |
| * காசு | 3 400 | | |
| * பெற்ற கழிவு | 400 | | |
| * மீதி/கீ/கொ/செ | 6 700 | | |
| | 10 800 | | 10 800 |

கடன் பட்டோர் கணக்கு ரூ' 000

| | | | | |
|---|---|---|---|---|
| | (02) | | | |
| மீதி/கீ/கொ/வ | 2 200 | அ.மு.க | 100 | (01) |
| தொங்கல் கணக்கு | 1 800 | மீதி/கீ/கொ/செ | 3 900 | |
| | 4 000 | | 4 000 | |
| மீதி/கீ/கொ/வ | 3 900 | | | |

செய்கை -

| | | | |
|---|---|---|---|
| * விற்பனை | 10 000 | * காசு | 5 600 |
| | | * கொடுத்த கழிவு | 200 |
| | | * உட்திரும்பல் | 200 |
| | 10 000 | * மீதி/கீ/கொ/வ | 4 000 |
| | | | 10 000 |

**(06 புள்ளிகள்)**
**(மொத்தம் 30 புள்ளிகள்)**

**4 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




இவ்வினாவிற்காக ஒதுக்கப்பட்ட புள்ளிகளின் அளவு 15 x 2 = 30 ஆகும்.
4 ஆம் வினாவினை விண்ணப்பதாரிகளுள் 95%மானோர் மட்டுமே தெரிவு செய்துள்ளனர்.
அதில் 00 - 07 புள்ளி வகுப்பாயிடையில் 34% ம்
08 - 15 புள்ளி வகுப்பாயிடையில் 28% ம்
16 - 23 புள்ளி வகுப்பாயிடையில் 23% ம்
24 - 30 புள்ளி வகுப்பாயிடையில் 15% ம்
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். அதற்கேற்ப இவ்வினாவிற்கு 24 புள்ளிகள் அல்லது அதனையும் விடக் கூடிய புள்ளிகளைப் பெற்றோர் 15%மாகக் காணப்படுவதுடன் விண்ணப்பதாரிகளில் 34%மானோர் 07 புள்ளிகள் அல்லது அதனையும்விடக் குறைவாகவே பெற்றுள்ளனர்.



Download Past Papers at : www.freebooks.lk




இவ்வினாவிற்குரிய 3 உபபகுதிகளினதும் இலகுதன்மை 50%த்தை விட கூடியதாகும். இலகுதன்மை குறைந்த உபபகுதி (ஆ) (2) ஆகக் காணப்படுவதுடன் அதன் இலகுதன்மை 42%மாகும். இலகுதன்மை கூடிய உபபகுதியாக (அ) (3) காணப்படுவதுடன் அதன் இலகுதன்மை 72% ஆகும்.

(4) (அ) (1) பகுதியின் இலகுதன்மை 53%மாகும். மூலப்பொருள் கொள்வனவு அளவானது சகல சந்தர்ப்பங்களிலும் சம அளவாக இருக்கும் நிலையே கட்டளையின் அளவாகும் என்பதை விண்ணப்பதாரிகளுக்கு விளங்கிக்கொள்ள முடியாமல் போயிருந்ததை அறிய முடிந்தது.

(அ) (2) பகுதியின் இலகுதன்மை 45%மாகும். மூலப்பொருட்களை வழங்கும் விலையினைக் கண்டுபிடிப்பதற்கு இருப்பினை வழங்கும்போது விலையிடல் சூத்திர முறையானது பின்பற்றப்படல் வேண்டும் என்பதை பெரும்பாலான விண்ணப்பதாரிகள் விளங்கியிருக்கவில்லை என்பதனை இங்கு அறியக்கூடியதாக உள்ளது.

(அ) (3) ஆம் பகுதியின் இலகுதன்மை 72%மாகும். இப்பகுதியின் இலகுதன்மை அதிகரித்துள்ளமைக்கு இருப்பு மட்டம் தொடர்பிலான சூத்திரம் எளிய சூத்திரமொன்றாக காணப்படுவதனாலாகும். எனினும் சில மாணவர்களுக்கு இது தொடர்பிலான விளக்கம் குறைவான மட்டத்தில் காணப்படுவதையும் அறிய முடிகின்றது.

(அ) (4) பகுதியின் இலகுதன்மை 57%மாகும். இருப்பு மட்டம் தொடர்பிலான சூத்திரத்தை சில விண்ணப்பதாரிகள் இலகுவாக பயன்படுத்தியிருந்தாலும் சில விண்ணப்பதாரிகள் இச்சூத்திரத்தை மறந்தமை புள்ளிகள் குறைவடைவதற்குக் காரணமாகும் என்பதை இங்கு குறிப்பிடலாம்.

(ஆ) (5) பகுதியின் இலகுதன்மை 64%மாகும். ஆகக் குறைந்த இருப்பு மட்டத்தைக் கணிப்பிடுவதற்கு முன்னர் சராசரிபாவனை, சராசரி கட்டளைக்காலம் என்பவற்றை கணிக்க வேண்டியிருப்பதனால் சில மாணவர்கள் இதனைக் கணிப்பதில் இடரை எதிர்நோக்கியுள்ளனர் என்பதனை எம்மால் உணர முடிந்தது.

(ஆ) (1) பகுதியின் இலகுதன்மை 44%மாகும். முதன்மை ஏடுகள் தொடர்பிலான வினா புதிய முறையில் முன்வைக்கப்பட்டமை, மற்றும் காசுப் பெறுவனவு கொடுப்பனவு என்பவற்றிற்கு வெவ்வேறாக குறிப்பேடுகளை பேணுதல் தொடர்பிலான விண்ணப்பதாரிகள் விடையளித்துள்ள முறை மிகப் பலவீனமான மட்டத்தில் காணப்படுகின்றது. வணிகங்களின் கொடுக்கல் வாங்கல்களின் தன்மைக்கேற்ப பகுப்பாய்வு நிரல்களுடன் கூடிய வங்கி / காசு குறிப்பேடுகளை பேணுவதற்கான விளக்கத்தை வழங்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகள் ஒழுங்கமைக்கப்படல் முக்கியமானதாகும்.

(ஆ) (2) பகுதியின் இலகுதன்மை 42%மாகும். வழுக்களைத் திருத்துவதற்குரிய சரியான பொது நாட்குறிப்புப் பதிவுகளை பெரும்பாலான விண்ணப்பதாரிகள் எழுதியிருக்கவில்லை. அதற்கான காரணம் முதன்மை ஏடுகளில் கொடுக்கல் வாங்கல்களை சரியாகப்பதிவு செய்கின்ற முறை, பேரேட்டினைத் தயாரிக்கும்போது இரட்டைப் பதிவினைப் பதிவுசெய்யும்போது பின்பற்றவேண்டிய முறை, கட்டுப்பாட்டுக் கணக்கினைப் பேணும்போது பேரேட்டுக் கணக்குகளில் இரட்டைப் பதிவினை மேற்கொள்கின்ற முறை என்பவை தொடர்பில் மாணவர்களின் அறிவானது போதுமான மட்டத்தில் இல்லை என்பதை கூறமுடியும்.

(ஆ) (3) பகுதியின் இலகுதன்மை 48%மாகும். பெரும்பாலான மாணவர்களுக்கு வழுக்களைத் திருத்திய பின்னர் கட்டுப்பாட்டுக் கணக்கினை தயாரிக்க முடியாதிருந்தது. சரியான முறையில் கட்டுப்பாட்டுக்க கணக்கினைத் தயாரிப்பது தொடர்பிலான விளக்கத்தைப் பெற்றுக்கொடுத்தல் இங்கு முக்கியமாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

05 ஆம் வினா

**5. (அ)** பின்வரும் தகவல்கள் வரையறுக்கப்பட்ட போல் பொதுக் கம்பனியுடன் தொடர்பானவையாகும்.

| **விபரம்** | **31.03.2015 இல் உள்ளபடி (ரூ.'000)** | **31.03.2014 இல் உள்ளபடி (ரூ.'000)** |
|---|---|---|
| வியாபார வருமதிகள் | 540 | 420 |
| சரக்கிருப்புகள் | 1 800 | 2 200 |
| காசும் காசுக்குச் சமமானவைகளும் | 660 | 380 |
| வியாபார கொடுக்குமதிகள் | 1 200 | 1 800 |
| செலுத்த வேண்டிய வட்டி | 300 | 200 |

| **31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கானது:** | **ரூ.'000** |
|---|---|
| மொத்த விற்பனைகள் | 8 000 (இதில் 60% ஆனவை கடன் விற்பனையாகும்.) |
| கொள்வனவுகள் | 3 600 |
| இலாபம் | 2 400 |

வருடமொன்றுக்கான வேலை நாட்களின் எண்ணிக்கை 360 எனக் கருதுக.

**வேண்டப்படுவது:**

31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான:

(1) தேறிய இலாப விகிதம்
(2) மொத்த இலாப விகிதம்
(3) நடைமுறை விகிதம்
(4) வியாபார வருமதிகள் (கடன்பட்டோர்) புரள்வு விகிதம்
(5) இருப்பு வைத்திருத்தல் காலம் ***(05 புள்ளிகள்)***

05. (அ) (1) தேறிய இலாப வீதம் = 30% (02)

செய்கை : ரூ'000

$$\frac{\text{முன் இலாபம்}}{\text{விற்பனை}} \times 100 = \frac{2400 \;\boxed{01}}{8000 \;\boxed{01}} \times 100$$

(2) மொத்த இலாப வீதம் = 50% (02)

செய்கை : ரூ'000

$$\frac{\text{மொத்த இலாபம்}}{\text{விற்பனை}} \times 100 = \frac{4000 \;\boxed{01}}{8000 \;\boxed{01}} \times 100$$

(3) நடைமுறை விகிதம்= 2 : 1 (02)

செய்கை : ரூ'000

$$\frac{\text{நடைமுறை சொத்து}}{\text{நடைமுறை பொறுப்பு}} = \frac{540 + 1\,800 + 660}{1\,200 + 300} = \frac{3\,000 \;\boxed{01}}{1\,500 \;\boxed{01}}$$



Download Past Papers at : www.freebooks.lk

(4) வியாபார வருமதிகள் புரள்வு விகிதம் = 10 தடவைகள் (02)

செய்கை : ரூ'000

$$\frac{\text{கடன் விற்பனை}}{\text{சராசரி கடன்பட்டோர்}} = \frac{4\ 800\ \boxed{01}}{480\ \boxed{01}}$$

(5) இருப்பு வைத்திருக்கும் காலம் = 180 நாட்கள் (02)

செய்கை : ரூ'000

$$\frac{\text{சராசரி கடன்பட்டோர்}}{\text{கடன் விற்பனை}} \times 360 = \frac{2\ 000\ \boxed{01}}{4\ 000\ \boxed{01}} \times 360$$

**(10 புள்ளிகள்)**

**(ஆ)** நாகேந்திரன் கொழும்பில் தனியார் பாடசாலையொன்றை ஆரம்பிக்கத் திட்டமிடுகின்றார். இப் பாடசாலையின் எதிர்பார்க்கப்படும் வருமானம், செலவுகள் என்பன பின்வருமாறு:

மாணவரொருவருக்கான கட்டணம்:

| | |
|---|---|
| பதிவுசெய்தல் கட்டணம் | ரூ. 12 000 வருடாந்தம் |
| வசதிக் கட்டணம் | ரூ. 12 000 வருடாந்தம் |
| பாடநெறிக் கட்டணம் | ரூ. 10 000 மாதாந்தம் |

செலவினங்கள்:

| | |
|---|---|
| பாடப்புத்தகங்கள் அச்சிடல் செலவு | ஒரு மாணவனுக்கு மாதாந்தம் ரூ. 4 000 |
| காகிதாதிகள் | ஒரு மாணவனுக்கு மாதாந்தம் ரூ. 3 000 |
| விளையாட்டுச் செலவினங்கள் | ஒரு மாணவனுக்கு மாதாந்தம் ரூ. 1 000 |
| கட்டட வாடகை | ரூ. 40 000 மாதாந்தம் |
| சம்பளங்கள் | ரூ. 30 000 மாதாந்தம் |
| விளம்பரமும் மேம்படுத்தலும் | ரூ. 10 000 மாதாந்தம் |

**வேண்டப்படுவது:**

(1) வருடத்திற்கான ஒரு மாணவனின் பங்களிப்பு

(2) வருடத்திற்கான பாடசாலையின் மொத்த நிலையான கிரயம்

(3) பாடசாலையின் வருடத்திற்கான மொத்தக் கிரயத்தை ஈடுசெய்வதற்குச் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டிய மாணவர்களின் எண்ணிக்கை

(4) ரூ. 240 000 இலாபத்தை உழைப்பதற்குச் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டிய மாணவர்களின் எண்ணிக்கை

(5) 50 மாணவர்கள் அனுமதிக்கப்படுவதுடன் அவர்களில் 10 மாணவர்களின் பாடநெறிக் கட்டணம் தள்ளுபடி செய்யப்படுமாயின் எதிர்பார்க்கப்படும் இலாபம் அல்லது நட்டம்

***(10 புள்ளிகள்)***

***(மொத்தம் 15 புள்ளிகள்)***



Download Past Papers at : www.freebooks.lk

05. (ஆ) (1) வருடத்திற்கான ஒரு மாணவனின் பங்களிப்பு = ரூ. 48 000 (05)

செய்கை
வருமானம் - மாறும் கிரயம்
144 000 - 96 000

| வருமானம் | ரூ | | மாறும் கிரயம் | ரூ | |
|---|---|---|---|---|---|
| பதிவுக் கட்டணம் | 12 000 | 01 | பாடப்புத்தக அச்சிடல் | 48 000 | 01 |
| வசதிக் கட்டணம் | 12 000 | | காகிதாதிகள் | 36 000 | 01 |
| பாடநெறிக்கான க/ம் | 120 000 | 01 | விளை. செலவுகள் | 12 000 | 01 |
| | 144 000 | | | 96 000 | |

(2) மொத்த நிலையான கிரயம் = ரூ.960 000 (04)

செய்கை

| | ரூ | |
|---|---|---|
| கட்டிட வாடகை | 40 000 | 01 |
| சம்பளங்கள் | 30 000 | 01 |
| வியாபாரம், மேம்படுத்தல் | 10 000 | 01 |
| | 80 000 × 12 | 01 |
| | 960 000 | |

(3) பாடசாலையின் வருடத்திற்கான மொத்த கிரயத்தை ஈடுசெய்வதற்கு சேர்த்துக் கொள்ளப்பட வேண்டிய மாணவர்களின் எண்ணிக்கை = 20 (02)

செய்கை

$$\frac{\text{நிலையான கிரயம்}}{\text{அலகுக்கான பங்களிப்பு}} = \frac{960\ 000 \ \boxed{01}}{48\ 000 \ \boxed{01}}$$

(4) ரூ.240 000 இலாபம் உழைப்பதற்கு சேர்த்துக் கொள்ளப்படவேண்டிய மாணவர்களின் எண்ணிக்கை = 25 (03)

செய்கை

$$\frac{\text{நிலையான கிரயம் + எதிர்பார்க்கும் இலாபம்}}{\text{அலகுக்கான பங்களிப்பு}} = \frac{\boxed{01}\ 960\ 000 + 240\ 000 \ \boxed{01}}{\boxed{01}\ 48\ 000}$$



Download Past Papers at : www.freebooks.lk

(5) 50 மாணவர்கள் அனுமதிப்படுவதுடன் அவர்களில் 10 மாணவர்களின் பாடநெறிக் கட்டணம் தள்ளுபடி செய்யப்படுமாயின் எதிர்பார்க்கப்படும் இலாபம் = ரூ. 240 000 (06)

(மேற்குறித்த விடையினை பெறக்கூடிய பல்வேறு முறைகள் கீழே காட்டப்பட்டுள்ளன.)

செய்கை 01

| | | | |
|---|---|---|---|
| வருமானம் | | | |
| பதிவுசெய்தல் கட்டணம் 12 000 × 50 | 600 000 | 6 000 000 | |
| வசதிக் கட்டணம் 12 000 × 50 | 600 000 [01] | | |
| பாடநெறிக் கட்டணம் 10 000 × 40 × 12 | 4 800 000 [02] | | |
| மாறும் கிரயம் | | | |
| (48 000 + 36 000 + 12 000) × 50 | | (4 800 000) | [02] |
| பங்களிப்பு | | 1 200 000 | |
| நிலையான கிரயம் | | [01] (960 000) | |
| | | 240 000 | |

செய்கை 02

| | | | |
|---|---|---|---|
| மொத்த பங்களிப்பு | 48 000 [02] × 50 [01] | 2 400 000 | |
| கட்டண தள்ளுபடி | 10 000 [01] × 12 [01] × 10 [01] | (1 200 000) | |
| | | 1 200 000 | |
| நிலையான செலவு | 96 000 × 10 | (960 000) | [01] |
| இலாபம் | | 240 000 | |

செய்கை 03

எதிர்பார்க்கும் இலாபம் = (பாதுகாப்பின் எல்லை × அலகுப் பங்களிப்பு) - தள்ளுபடி கட்டணம்

= (30 [02] × 48 000 [01]) - 120 000 [02] × 10 [01]

= 1 400 000 - 1 200 000

= ரூ 240 000

**(20 புள்ளிகள்)**

**(மொத்தம் 30 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**5 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




இவ்வினாவிற்காக ஒதுக்கப்பட்ட புள்ளிகளின் அளவு 15 x 2 = 30 ஆகும்.

விண்ணப்பதாரிகளுள் 79% மானர்களே 5 ஆம் வினாவினைத் தெரிவு செய்துள்ளனர். இவ்வினாவிற்காக மொத்தப்புள்ளிகள் 30 வழங்கப்படும்.

அதில் 00 - 07 புள்ளி வகுப்பாயிடையில் 21% ம்
08 - 15 புள்ளி வகுப்பாயிடையில் 23% ம்
16 - 23 புள்ளி வகுப்பாயிடையில் 23% ம்
24 - 30 புள்ளி வகுப்பாயிடையில் 33% ம்

என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இவ்வினாவிற்காக புள்ளிகள் 24 அல்லது அதிலும் கூடுதலாகப் பெற்றவர்கள் 33%மாக இருப்பதுடன் விண்ணப்பதாரிகளுள் 07 அல்லது அதிலும் குறைவாகப் புள்ளிகள் பெற்றவர்களின் வீதம் 21%மாகும்.




இவ்வினாவிற்குரிய உப பிரிவுகள் 10 இன் 8 ஆவது பிரிவின் இலகுதன்மை 70% த்தை விட உயர்வாகக் காணப்படுகின்றது. அதிகூடிய இலகுதன்மை (அ)(1) இல் 82% மாகும். (ஆ) (2) 79%மாகும். குறைவான இலகுதன்மை (அ) (5) இல் 59%மும் (ஆ)(5)இல் 39%மாகக் காணப்படுகின்றது.

(5) (அ) (5) இன் இலகுதன்மை 59%மாகும். இருப்புப் புரள்வு விகிதத்தினூடாக இருப்பானது விற்பனையாவதற்கு எடுக்கும் காலத்தை இனங்காண்பதற்குரிய ஆற்றல் தொடர்பாக மாணவர்களின் விளக்கமானது பலவீனமான மட்டத்திலே காணப்படுகின்றது.

(ஆ) (5) இன் இலகுதன்மை 39%மாகும். இங்கு இலகுதன்மை குறைவதற்குக் காரணம் விண்ணப்பதாரிகள் பாடநெறிக்கான வருமானத்தினைக் கணிப்பிடும்போது 10 மாணவர்களின் தள்ளுபடி செய்யப்பட்ட பாடநெறிக் கட்டணம் விடுவட்டமையை இனங்காண்பதில் சிரமம் எதிர்நோக்கப்பட்டமையாகும். அதேபோன்று இலாபத்தைக் கணிப்பிடும்போது மாற்று வழிமுறையொன்று இருப்பதனால் அம்மாற்று வழி முறைகளில் மிக இலகுவான முறையை விண்ணப்பதாரிகள் அறிந்திருக்காமையாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

## 06 ஆம் வினா

**6.** 31.03.2015, 31.03.2014 ஆகிய திகதிகளிலுள்ள வரையறுக்கப்பட்ட சுந்தரம் கம்பனியின் சுருக்கப்பட்ட நிதி நிலைமைச் கூற்றுகள் கீழே தரப்பட்டுள்ளன:

| | 31.03.2015 இல் (ரூ. '000) | 31.03.2014 இல் (ரூ. '000) |
|---|---|---|
| ஆதனம், பொறி, உபகரணம் - கிரயத்தில் | 19 600 | 13 100 |
| ஆதனம், பொறி, உபகரணம் - திரண்ட பெறுமானத்தேய்வு | (3 800) | (2 800) |
| இருப்புக்கள் | 1 500 | 1 400 |
| வியாபார வருமதிகள் | 1 600 | 1 800 |
| காசும் காசுக்குச் சமமானவையும் | 400 | 500 |
| **மொத்தச் சொத்துக்கள்** | **19 300** | **14 000** |
| கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | 9 500 | 8 000 |
| நிறுத்தி வைத்த வருவாய்கள் | 5 500 | 4 400 |
| நிலம் மீதான கடன் | 2 400 | – |
| வியாபாரக் கொடுக்குமதிகள் | 1 750 | 1 600 |
| செலுத்த வேண்டிய கடன் வட்டி | 150 | – |
| **மொத்த பொறுப்புக்களும் உரிமையாண்மையும்** | **19300** | **14 000** |

**மேலதிக தகவல்கள்:**

(i) இவ்வருடத்தில் ரூ. 1 000 000 கிரயம் கொண்ட அலுவலக உபகரணம் ரூ. 300 000 இற்கு காசுக்கு விற்பனை செய்யப்பட்டது. விற்பனை செய்யப்பட்ட தினத்தில் இவ் உபகரணத்தின் கொண்டுசெல் மீதி ரூ. 600 000 ஆகும்.

(ii) ரூ. 3 000 000 பெறுமதியான நிலமொன்று 01.04.2014 இல் கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்டது. இக்கடனானது இந்நடைமுறை ஆண்டிலிருந்து ரூ. 600 000 வீதம் சமமான 5 தவணைகளில் செலுத்தப்படல் வேண்டும். மேலும் இக் கடனின் ஆரம்ப தொகைக்கு 5% வருட வட்டி செலுத்தப்படல் வேண்டும்.

(iii) இவ்வருடத்தில் பெற்றுக்கொள்ளப்பட்ட ஏனைய எல்லா ஆதனம், பொறி, உபகரணம் என்பன யாவும் காசுக்குக் கொள்வனவு செய்யப்பட்டதாகும்.

(iv) இவ்வருடத்தில் ரூ. 400 000 இடைக்காலப் பங்கிலாபம் செலுத்தப்பட்டது.

(v) இவ்வருடத்தில் வழங்கப்பட்ட சாதாரண பங்குகளின் உள்ளடக்கம் பின்வருமாறு இருந்தது.

| வழங்கல் முறை | தொகை (ரூ. '000) |
|---|---|
| பங்குகளின் உரிமை வழங்கல் | 1 000 |
| நிறுத்தி வைத்த வருவாய்களை மூலதனமாக்குவதன் மூலம் வழங்கப்பட்ட பங்குகள் | 500 |
| **மொத்தம்** | **1 500** |

பங்குதாரர்கள் அவர்களின் எல்லா உரிமைகளையும் பயன்படுத்தியுள்ளதுடன் காசும் உரிய முறையில் பெறப்பட்டது.

(vi) கம்பனியானது வரி விடுமுறைக் காலத்தில் செயற்பட்டுக் கொண்டிருக்கின்றது.

**வேண்டப்படுவது:**

(1) LKAS 7 (காசுப் பாய்ச்சற் கூற்று) இன்படி 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான சுந்தரம் கம்பனியின் காசுப் பாய்ச்சல் கூற்று

(2) அலுவலக உபகரண அகற்றல் கணக்கு **(மொத்தம் 15 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**06** (அ) (1)

வரையறுக்கப்பட்ட சுந்தரம் கம்பனி

31.03.2015ல் முடிவடைந்த வருடத்திற்கான காசுப்பாய்ச்சற்கூற்று ( ரூ 000)

| | | |
|---|---|---|
| **செயற்பாட்டு நடவடிக்கையில் உருவான காசுப்பாய்ச்சல்** | | |
| வரிக்கு முன் செயற்பாட்டு லாபம் | | 2 000 (04) |
| சீராக்கல் | 1 400 (01) | |
| வட்டிச் செலவுகள் | 150 (01) | |
| அலுவலக உபகரண அகற்றல் நட்டம் | 300 (01) | 1 850 |
| தொழிற்படும் மூலதன அசைவுக்குமுன் செயற்பாட்டு லாபம் | | 3 850 |
| இருப்பு அதிகரிப்பு | (100) (01) | |
| வியாபார வருமதிகள் குறைவு | 200 (01) | |
| வியாபார கொடுக்குமதிகள் அதிகரிப்பு | 150 (01) | 250 |
| செயற்பாட்டு நடவடிக்கை மூலம் உருவான தேறிய காசு (01) | | 4 100 |
| **முதலீட்டு நடவடிக்கையில் உருவான காசுப்பாய்ச்சல்** | | |
| அலுவலக உபகரண விற்பனை | 300 (01) | |
| ஆதனம் பொறி உபகரணம் கொள்வனவு | (4 500) (02) | |
| முதலீட்டு நடவடிக்கையில் பயன்படுத்திய தேறிய காசு (01) | | (4 200) |
| **நிதியீட்ட நடவடிக்கையில் உருவான காசுப்பாய்ச்சல்** | | |
| சாதாரண பங்கு வழங்கல் | 1 000 (01) | |
| செலுத்திய பங்கிலாபம் | (600) (02) | |
| கடன் மீளச் செலுத்தியது | (400) (01) | |
| நிதியீட்ட நடவடிக்கையில் உருவான தேறிய காசு (01) | | 0 |
| காசும் காசுக்கு சமமானவற்றின் தேறிய அதிகரிப்பு (01) | | (100) |
| 01.04.2014ல் காசும் காசுக்கு சமமானவை | | 500 (01) |
| 31.03.2015ல் காசும் காசுக்கு சமமானவை | | 400 (01) |

**(24 புள்ளிகள்)**

செய்கை

நிறுத்தி வைத்த வருவாய்க் கணக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| உபகாரப் பங்கு | 500 | 01 | மீதி/கீ/கொ/செ | 4 400 |
| பங்கிலாபம் | 400 | 01 | பகிர்வுக்குரிய லாபம் | 2 000 |
| மீதி/கீ/கொ/செ | 5 500 | 01 | | 6 400 |
| | 6 400 | | மீதி/கீ/கொ/செ | 5 500 |



Download Past Papers at : www.freebooks.lk

ஆதனம் பொறி உபகரணங்கள் கணக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| மீதி/வ | 13 100 | அகற்றல் | 1 000 | 01 |
| கடன் | 3 000 01 | | | |
| காசு | 4 500 | மீதி/கீ/கொ/செ | 19 600 | |
| | 20 600 | | 20 600 | |
| மீதி/கீ/கொ/வ | 19 600 | | | |

(2)

அலுவலக உபகரண அகற்றல் கணக்கு ரூ' 000

| | | | | |
|---|---|---|---|---|
| உபகரணம் | 1 000 | (02) பெறுமான தேய்வு ஏற்பாடு | 400 | (02) |
| | | காசு | 300 | (02) |
| | | நட்டம் | 300 | |
| | 1 000 | | 1 000 | |

**(06 புள்ளிகள்)**

**(மொத்தம் 30 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**6 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




இவ்வினாவிற்காக ஒதுக்கப்பட்ட புள்ளிகளின் அளவு 15 x 2 = 30 ஆகும்.
விண்ணப்பதாரிகளுள் 68% மானோர் மட்டுமே 6 ஆம் வினாவினைத் தெரிவு செய்துள்ளனர்.
அதில் 00 - 07 புள்ளி வகுப்பாயிடையில் 24% ம்
08 - 15 புள்ளி வகுப்பாயிடையில் 30% ம்
16 - 23 புள்ளி வகுப்பாயிடையில் 25% ம்
24 - 30 புள்ளி வகுப்பாயிடையில் 21% ம்
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இவ்வினாவிற்காக 24 புள்ளிகள் அல்லது அதிலும் கூடுதலான புள்ளிகளைப் பெற்றவர்கள் 21% மாகக் காணப்படுவதுடன் விண்ணப்பதாரிகளுள் 24% மானர்கள் 07 அல்லது அதிலும் குறைவான புள்ளிகளையே பெற்றுள்ளனர்.




இவ்வினாவிற்குரிய 02 உபபிரிவுகளில் ஒரு பகுதியின் இலகுதன்மை 76%மாகும். இலகுதன்மை குறைந்த பகுதி (1) ஆக இருப்பதோடு அதன் இலகுதன்மை 50% ஆகும்.

(6) (1) பகுதியின் இலகுதன்மை 50%மாகும். காசுப் பாய்ச்சல் கூற்று தொடர்பில் LKAS 07 நியமத்தினூடாக வழங்கப்பட்டிருக்கும் சரியான மாதிரி தொடர்பிலான விளக்கமானது மாணவர்களின் அரைவாசிப்பேர்களுக்கு விளங்காமல் இருந்ததே இதற்குரிய காரணமாக இருக்க முடியும். நேர், நேரில் முறைகள் தொடர்பாக மட்டுமன்றி செயற்பாட்டு, முதலீட்டு, நிதிச் செயற்பாடுகளின் கீழ் உருப்படிகளைப் பதிவுசெய்யும் முறை மற்றும் தேறிய காசுப் பாய்ச்சல் (சாதக/பாதக) தொடர்பாகத் தேவையான அளவிலான விளக்கம் விண்ணப்பதாரிகளுக்கு இல்லாதிருப்பதை இங்கு காணக்கூடியதாக இருக்கின்றது.

மேலும் நிறுத்தி வைத்த உழைப்பினை மூலதனமாக்கல் பங்கிலாபக் கொடுப்பனவுகளை நிதியாண்டின் இலாபக் கணக்குகளிற்கு மாற்றுதல் என்பன தொடர்பான விளக்கம் குறைவாக இருந்தமை காரணமாக மிகச் சிறந்த புள்ளிப் பெறுமானத்தை நோக்கிச் செல்வது விண்ணப்பதாரிகளுக்கு சிரமமாக இருந்தமையை இங்கு அவதானிக்க முடிகின்றது.

மேற்குறிப்பிட்ட விடயங்களுடன் ஆதனம் பொறி மற்றும் உபகரணக் கொள்வனவு விற்பனை, பெறுமானத் தேய்வு அவற்றுக்கான இலாப நட்டத்தைப் பதிவு செய்தல் தொடர்பான விளக்கங்கள் கிடைக்கக்கூடியவாறு கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்துக் கொள்வது மிக முக்கியமாகும்.

6 (2) ஆம் பகுதியின் இலகுதன்மை 76%மாகும். அலுவலக உபகரணங்களை அகற்றுதல் கணக்கினைத் தயாரிப்பதற்கு மாணவர்கள் முயற்சித்திருந்தாலும் கூட சொத்தின் கிரயத்தை அதன் தேறிய பெறுமானத்தினூடாக சீராக்கம் செய்வதற்கு சில விண்ணப்பதாரிகளினால் முடியாமல் போயிருந்தது.



Download Past Papers at : www.freebooks.lk

## 07 ஆம் வினா

**7.** **(அ)** கம்பனியொன்று அச்சகமொன்றை ஆரம்பிக்கத் திட்டமிடுகிறது. கம்பனியானது இந்நோக்கத்திற்காகக் கொள்வனவு செய்யவிருக்கும் அச்சு இயந்திரத்துடன் தொடர்பான காசுப் பாய்ச்சல்கள் கீழே காட்டப்பட்டுள்ளன.

| | ரூ. ' 000 |
|---|---|
| கொள்வனவு விலை | 2 000 |
| இடத்தைத் தயார்படுத்தற் செலவுகள் | 200 |
| நிர்மாணித்தல் கட்டணங்கள் | 300 |

இவ் இயந்திரத்தின் எதிர்பார்க்கப்படும் எஞ்சிய பெறுமதியும் பயன்தரு ஆயுட்காலமும் முறையே ரூ. 500 000, 4 வருடங்கள் ஆகும்.

இச்செயற்றிட்டத்தின் ஆரம்பத்தில் தேவைப்படும் தொழிற்படு மூலதனம் ரூ. 500 000 ஆகும். இத்தொகை செயற்றிட்டத்தின் இறுதியில் மீளப் பெறப்படும்.

அச்சகத்தின் எதிர்பார்க்கப்படும் வருமானமும் செயற்பாட்டுச் செலவுகளும் பின்வருமாறாகும்.

ரூ. ' 000

| வருடம் | 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| வருமானம் | 3 500 | 4 500 | 6 000 | 7 500 |
| செயற்பாட்டுச் செலவுகள் (பெறுமானத்தேய்வு உட்பட) | 2 000 | 3 000 | 3 500 | 4 000 |

இச்செயற்றிட்டத்தின் தேவைப்படும் திரும்பல் வீதம் 10% இல் கழிவீட்டுக் காரணி (முதலாம் தசமதானத்தில்)

| வருடம் | 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| கழிவீட்டுக் காரணி | 0.9 | 0.8 | 0.7 | 0.6 |

**வேண்டப்படுவது:**

செயற்றிட்டம் தொடர்பான பின்வருவன:

(1) ஒவ்வொரு விடயத்தையும் **தனித்தனி**யாகக் காட்டும் ஆரம்ப காசு வெளிப்பாய்ச்சலின் மொத்தம்
(2) வருடம் 1 இலிருந்து 4 வரைக்குமான வருடாந்த காசு உட்பாய்ச்சல்களும் வெளிப்பாய்ச்சல்களும்
(3) தேறிய நிகழ்காலப் பெறுமதி
(4) தேறிய நிகழ்காலப் பெறுமதியின் அடிப்டையில் செயற்றிட்டத்தின் சாத்திய தன்மைக்கான சிபாரிசுகள்

***(05* புள்ளிகள்)**

07 (அ) (1)

| | ரூ' 000 | |
|---|---|---|
| அச்சு இயந்திரக் கிரயம் | 2 000 | (01) |
| இடத்தைத் தயார்ப்படுத்தும் செலவு | 200 | |
| நிர்மாணிக்கும் கட்டணங்கள் | 300 | |
| தொழிற்படும் மூலதனம் | 500 | (01) |
| ஆரம்ப காசு வெளிப்பாய்ச்சல் | 3 000 | |

**(02 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

(2)

| உருப்படிகள் \ வருடம் | 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|---|
| காசு உட்பாய்ச்சல் : | | | | | |
| வருமானம் | 3 500 | 4 500 | 6 000 | 7 500 | |
| | | (01) | | | |
| தொழிற்படு மூலதனம் | - | - | - | 500 | (01) |
| இயந்திரத்தின் எஞ்சும் பெறுமதி | | | | 500 | (01) |
| | 3 500 | 4 500 | 6 000 | 8 500 | |
| காசு வெளிப்பாய்ச்சல் : | | | | | |
| செயற்பாட்டு செலவுகள் | 1 500 | 2 500 | 3 000 | 3 500 | |
| | | (02) | | | |

**(05 புள்ளிகள்)**

(3) தேறிய நிகழ்கால பெறுமதி (NPV) = ரூ.5 500 000 (02)

(02 புள்ளிகள்)

| வருடம் | தேறிய காசுப் பாய்ச்சல் | கழிவு காரணி | கழிவு செய்யப்பட்ட காசோட்டம் |
|---|---|---|---|
| 0 | (3 000) | 1 | (3 000) |
| 1 | 2 000 | 0.9 | 1 800 |
| 2 | 2 000 | 0.8 | 1 600 |
| 3 | 3 000 | 0.7 | 2 100 |
| 4 | 5 000 | 0.6 | 3 000 |
| | 01 | 01 | |
| தேறிய நிகழ்கால பெறுமதி | | | 5 500 |

(4) இயந்திரத்தை கொள்வனவு செய்யலாம்.
காரணம் : தேறிய நிகழ்கால பெறுமதி நேர்க்கணியமாகக் காணப்படுகின்றது. (01)

(01 புள்ளி)



Download Past Papers at : www.freebooks.lk

(ஆ) 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான ரத்னா விளையாட்டுக் கழகத்தின் கொள்ளல் கொடுத்தல் கணக்கு பின்வருமாறு:

**கொள்ளல் கொடுத்தல் கணக்கு (ரூ. '000)**

| | | | |
|---|---|---|---|
| மீதி கீ/வ | 80 | பார்வையாளர் பகுதி மீள் சீரமைப்பு | 300 |
| விளையாட்டு உபகரண அன்பளிப்பு | 500 | சம்பளம்: | |
| சந்தா | 390 | - மைதான பாதுகாப்பாளர் | 360 |
| நுழைவுக் கட்டணம் | 120 | - முகாமையாளர் | 240 |
| மைதான வாடகைக் கட்டணம் | 660 | அலுவலக செலவுகள் | 50 |
| | | மைதான பராமரிப்பு | 150 |
| | | விளையாட்டு உபகரணம் | 500 |
| | | மீதி கீ/செ | 150 |
| | 1 750 | | 1 750 |

**மேலதிக தகவல்கள்:**

(i) பின்வருவன 01.04.2014 இல் ஆதனம், பொறி மற்றும் உபகரணம் என்பவற்றுடன் தொடர்புடைய தகவல்களாகும்:

| | கிரயம் (ரூ. '000) | திரண்ட பெறுமானத்தேய்வு (ரூ. '000) | எதிர்பார்க்கப்படும் பயன்தரு ஆயுட்காலம் (வருடங்கள்) |
|---|---|---|---|
| விளையாட்டு மைதானம் | 2 000 | – | – |
| பார்வையாளர் பகுதி | 1 500 | 750 | 20 |
| விளையாட்டு உபகரணங்கள் | 500 | 300 | 5 |

(ii) பார்வையாளர் பகுதியின் மீள் சீரமைப்புப் பணிகள் 01.04.2014 இல் முடிவடைந்ததுடன் அதே தினத்திலிருந்து இப்பகுதி பயன்படுத்தப்பட்டது. இத் தொகையானது பார்வையாளர் பகுதிக் கணக்கில் இன்னும் இனங்காணப்பட்டிருக்கவில்லை. மேலும் மீதமாகவுள்ள பார்வையாளர் பகுதியின் பயன்தரு ஆயுட்காலம் இத் தினத்திலிருந்து 15 வருடங்களுக்கு அதிகரித்தது.

(iii) விளையாட்டு உபகரணங்கள் கொள்வனவுக்காக 01.04.2014 இல் காசு அன்பளிப்பு பெறப்பட்டதுடன் இப் பொருட்கள் 01.10.2014 இல் கொள்வனவு செய்யப்பட்டன. இவ் உபகரணங்களின் எதிர்பார்க்கப்பட்ட பயன்தரு ஆயுட்காலம் 5 வருடங்களாகும். மேலும் அன்பளிப்புகளை அவை கிடைக்கப்பெற்ற வருடத்திலிருந்து 5 வருடங்களுக்கான வருமானமென இனங்காண்பது இக் கழகத்தின் கொள்கையாகும்.

(iv) ஓர் அங்கத்தவருக்கான வருடாந்தச் சந்தா ரூ. 6 000 ஆகும். 01.04.2014 இல் இக்கழகத்தின் அங்கத்தவர்களின் எண்ணிக்கை 40 ஆகும். இத்தினத்தில் மேலும் 10 அங்கத்தவர்கள் கழகத்தில் சேர்ந்துகொண்டதுடன் இவர்கள் ஒரே தடவையில் இரண்டு வருடங்களுக்கான சந்தாவையும் செலுத்தினர். நடைமுறையாண்டினுள் பெறப்பட்ட சந்தாவினுள் 2013/2014 தொடர்பாக பெறப்பட்ட ரூ. 30 000 உம் உள்ளடங்கியுள்ளது. 31.03.2015 இல் பெற வேண்டிய சந்தா என எதுவுமில்லை.

(v) இக்கழகம் விளையாட்டு மைதானத்தை விளையாட்டு நிகழ்ச்சியொன்றுக்கு ரூ. 300 000 இற்கு வாடகைக்கு விடுகின்றது. இத்தொகையில் 60% மைதானத்தைப் பதிவுசெய்யும்போதும் மிகுதி விளையாட்டு நிகழ்ச்சி நடைபெறும் தினத்திலும் செலுத்தப்படல் வேண்டும். விளையாட்டு நிகழ்ச்சிகளின் விபரங்கள் பின்வருமாறு.

| நிகழ்ச்சி இல. | நிகழ்ச்சிப் படிநிலை | நடைமுறையான்டு காலத்தினுள் காசுப் பெறுவனவு |
|---|---|---|
| 1 | 01.07.2014 இல் முடிவடைந்தது. | முற்பணம் உட்பட முழுத் தொகையும் பெறப்பட்டது. |
| 2 | 08.11.2014 இல் முடிவடைந்தது. | முற்பணம் மாத்திரம் பெறப்பட்டது. |
| 3 | 2015 ஏப்ரல் மாதத்தின் முதல் வாரத்தில் நடைபெறும். | 2015 மார்ச் மாதத்தில் முற்பணம் பெறப்பட்டுள்ளது. |

**வேண்டப்படுவது:**

ரத்னா விளையாட்டுக் கழகத்திற்கான பின்வருவன:

(1) 01.04.2014 இலுள்ள திரண்ட நிதி

(2) 31.03.2015 இல் முடிவடைந்த வருடத்திற்கான வருமானக் கூற்று

(3) 31.03.2015 இலுள்ள நிதிநிலைமைக் கூற்று

***(10 புள்ளிகள்)***

***(மொத்தம் 15 புள்ளிகள்)***



Download Past Papers at : www.freebooks.lk

(1) திரண்ட நிதி ரூ 3 060 000 (02)

| | |
|---|---|
| **செய்கை :** | **ரூ' 000** |
| **விளையாட்டு மைதானம்** | 2 000 |
| **பார்வையாளர் பகுதி** | 750 |
| **விளையாட்டு உபகரணம்** | 200 |
| **காசு** | 80 |
| **வருமதி சந்தா** | 30 |
| திரண்ட நிதி | 3 060 |

இரு உருப்படிகளுக்கு 1 புள்ளி வீதம் கூடிய புள்ளிகள் 02

(2) ரத்னா விளையாட்டுக்கழகம்

31/03/2015ல் முடிவடைந்த வருடத்திற்கான வருமானச் செலவுக் கணக்கு (ரூ 000)

| | | |
|---|---|---|
| வருமானங்கள் | | |
| அங்கத்துவ சந்தா | 300 | (01) |
| விளையாட்டு உபகரண அன்பளிப்பு | 100 | (01) |
| நுழைவுக் கட்டணம் | 120 | * |
| விளையாட்டு மைதான வாடகை வருமானம் | 600 | (01) 1 120 |
| செலவினங்கள் | | |
| மைதான காப்பாளர் சம்பளம் | 360 | * |
| முகாமையாளர் சம்பளம் | 240 | * |
| அலுவலகச் செலவுகள | 50 | * |
| மைதான பராமரிப்புச் செலவுகள் | 150 | * |
| பார்வையாளர் பகுதி பெறுமானத்தேய்வு | 70 | (02) |
| விளையாட்டு உபகரணப் பெறுமானத் தேய்வு | 150 | (02) 1 020 |
| வருமான மிகை | | (01) 100 |

* உருப்படிகள் இரண்டிற்கு 01 புள்ளி வீதம் ஆகக்கூடிய புள்ளிகள் (02)

(10 புள்ளி)



Download Past Papers at : www.freebooks.lk

(3) ரத்னா விளையாட்டுக்கழகம்

31/03/2015ல் உள்ளபடியான நிலைமைக் கூற்று (ரூ 000)

| | | | | |
|---|---|---|---|---|
| நடைமுறையல்லாச் சொத்துக்கள் | | | | |
| விளையாட்டு மைதானம் | | | 2 000 | |
| பார்வையாளர் பகுதி | | | 980 | (01) |
| விளையாட்டு உபகரணம் | | | 550 | (01) |
| | | | 3 530 | |
| நடைமுறைச் சொத்துக்கள் | | | | |
| பெற வேண்டிய மைதான வாடகை | 120 | (01) | | |
| வங்கி மீதி | 150 | (01) | 270 | |
| | | | 3 800 | |
| திரண்ட நிதி - 2014.04.01 | 3 060 | | | |
| வருமான மிகை | (01) 100 | | 3 160 | |
| விளையாட்டு உபகரண நன்கொடை நிதி | | | 400 | (01) |
| நடைமுறைப் பொறுப்பு | | | | |
| மைதான வாடகை முற்பணம் | 180 | (01) | | |
| முற்பண சந்தா | 60 | (01) | 240 | |
| | | | 3 800 | |

(08 புள்ளிகள்)

(மொத்தம் 30 புள்ளிகள்)



Download Past Papers at : www.freebooks.lk

**7 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




இவ்வினாவிற்காக ஒதுக்கப்பட்ட புள்ளிகளின் அளவு 15 x 2 = 30 ஆகும்.
விண்ணப்பதாரிகளுள் 45% மானர்கள் மட்டுமே 7 ஆம் வினாவினைத் தெரிவு செய்துள்ளனர்.
அதில் 00 - 07 புள்ளி வகுப்பாயிடையில் 46% ம்
08 - 15 புள்ளி வகுப்பாயிடையில் 32% ம்
16 - 23 புள்ளி வகுப்பாயிடையில் 14% ம்
24 - 30 புள்ளி வகுப்பாயிடையில் 8% ம்
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். அதற்கேற்ப இவ்வினாவிற்கு 24 புள்ளிகள் அல்லது அதனை விடக்கூடுதலான புள்ளிகளைப் பெற்றவர்கள் 8%மாகக் காணப்படுவதுடன் விண்ணப்பதாரிகளில் 46%மானோர் 07 அல்லது அதனைவிடக் குறைவான புள்ளிகளையே பெற்றுள்ளனர்.




இவ்வினாவில் 7 உபபகுதிகளில் 4 பகுதிகளுக்கான இலகுதன்மை 50% த்தை விடக் கூடுதலாகும். அதில் 3 பகுதிகளுக்கான இலகுதன்மை 75%த்தை விடக் கூடியதாகக் காணப்படுகின்றது. (ஆ) (3) பகுதியின் இலகுதன்மை 27% மாகும்.

(7) (அ) (1) பகுதியின் இலகுதன்மை 75%மாகும். இங்கு விண்ணப்பதாரர்களுக்கு ஆரம்ப காசுப்பாய்ச்சல் தொடர்பில் தேவையானளவு விளக்கம் காணப்பட்டது எனக் கூற முடியும்.

(7) (அ) (2) பகுதியின் இலகுதன்மை 59%மாகும். காசுப்பாய்ச்சல் கணிப்பீட்டின்போது பெறுமானத் தேய்வு சீராக்கம் தொடர்பில் போதுமானளவு விளக்கம் விண்ணப்பதாரிகளிடம் காணப்படாமை புள்ளிகள் குறைவதற்கான காரணம் எனச் சுட்டிக்காட்டலாம்.

(7) (அ) (3) பகுதியின் இலகுதன்மை 77%மாகும். (4) பகுதியின் இலகுதன்மை 80%மாகும். இங்கு தேறிய நிகழ்காலப் பெறுமதியினைக் கணிப்பிடும் முறை, மற்றும் பெறுமதியின் அடிப்படையில் பொருத்தப்பாட்டினைத் தீர்மானித்தல் என்பன தொடர்பில் தேவையானளவு விளக்கம் காணப்படுகின்றது எனக் கூறமுடியும்.

(7) (ஆ) (1) பகுதியின் இலகதன்மை 37%மாகும். ஆரம்ப திரண்டநிதியினைக் கணிப்பதற்கு பெரும்பாலான விண்ணப்பதாரிகளுக்கு முடியாமல் போயிருந்தது. கொள்ளல் கொடுத்தல் கணக்கின் ஆரம்ப மீதியானது திரண்ட நிதியினைக் கணிக்கும்போது பயன்படுத்தப்படல் வேண்டும் என்பதை இவர்கள் அறிந்திருக்கவில்லை.



Download Past Papers at : www.freebooks.lk

(7) (ஆ) (2) பகுதியின் இலகுதன்மை 35%மாகும். இங்கு பார்வையாளர் பகுதியின் தேய்வு, விளையாட்டு உபகரணத் தேய்வு என்பவற்றின் கணிப்பீடு சரியாக மேற்கொள்ளப்படவில்லை என்பதுடன், ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்கும் ஏற்றவாறு தேய்வினைக் கணிப்பிட்டு சீராக்கம் செய்கின்ற முறை தொடர்பில் விண்ணப்பதாரிகளுக்கு போதுமான விளக்கம் காணப்படாமை இப்பகுதியில் குறைந்த புள்ளிகள் பெறுவதற்கு காரணமாயிருக்கலாம்.

(7) (ஆ) (3) பகுதியின் இலகுதன்மை 27%மாகும். விசேட நன்கொடையினை சீராக்கம் செய்வது தொடர்பில் விண்ணப்பதாரிகளிடம் குறைவாக காணப்பட்ட விளக்கமும் விளையாட்டு உபகரண நிதி தொடர்பில் சரியான கணிப்பீடு இடம்பெற்றிருக்காமையும் இலகுதன்மை குறைவாக இருப்பதற்கு காரணமாயிருக்கலாம்.

விளையாட்டு மைதானத்தை வாடகைக்கு கொடுத்து கிடைக்கவேண்டிய வாடகை வருமானம் நடைமுறை சொத்தாக சரியாக இனங்காணப்படாதிருந்ததுடன், வாடகைக்கு விடப்பட்டதன் மூலம் பெற்ற முற்பணத் தொகையானது பொறுப்பொன்றாகும் என கூடுதலான விண்ணப்பதாரிகள் விளங்கியிருக்கவில்லை.

பார்வையாளர் அரங்குக்கும், விளையாட்டு உபகரணங்களுக்கும் சரியாக பெறுமானத் தேய்வு கணிப்பிடப்படவில்லை என்பதுடன் இதன் காரணமாக அச் சொத்துக்களில் தேறிய பெறுமானம் சரியாக நிதிக் கூற்றுக்களில் பதியப்படவில்லை.

இலாப நோக்கற்ற அமைப்புக்களில் காணப்படும் விசேட நன்கொடையை உதாரணமொன்றாகப் பயன்படுத்தி வருடத்தின் சொத்துக்களின் அதிகரிப்பு, நிதியம் கட்டியெழுப்பப்படுகின்ற முறை என்பன விளங்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயலொழுங்கு ஒழுங்கமைக்கப்படல் வேண்டும் என்துடன் அவை தேய்வடையும் முறையும் விளங்கும் வகையில் மாணவர்களுக்கு கூடுதலான பயிற்சிகள் வழங்கப்படுதல் பொருத்தமானது.



Download Past Papers at : www.freebooks.lk

2.2.3 **வினாத்தாள்** II **இற்கு விடையளித்தல் தொடர்பான முழு அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள் :**




வினாத்தாள் II இன் 4 ஆம் வினா தவிர்ந்த ஏனைய வினாக்களின் இலகுதன்மை 43% அல்லது அதனை விடக் கூடியதாக உள்ளது.

வினாத்தாள் II இலுள்ள வினாக்களில் 68%த்தையும் விடக்கூடிய இலகுதன்மையானது 5 ஆம் வினாவில் காணப்படுவதுடன் 1 ஆவது வினாவிற்கான இலகுதன்மை 43% ம் என்ற குறைவான இலகுதன்மையைக் காட்டி நிற்கின்றது.

முதலாவது, இரண்டாவது வினாக்கள் கட்டாயமான வினாக்களாகும். இவ்விரு வினாக்களில் கூடுதலான இலகுதன்மையை 2 ஆம் வினாவே காட்டிநிற்பதுடன் அதன் இலகுதன்மை 57%மாகும்.

வினா 3 தொடக்கம் 7 வரையிலான வினாக்கள் தெரிவு வினாக்களாகவே வழங்கப்பட்டுள்ளதுடன் அதில் கூடுதலான இலகுதன்மை வினா 5 ற்கே காணப்படுகின்றது. அதன் இலகுதன்மை 68%மாகும். வினாக்களைத் தெரிவு செய்யும்போது கூடுதலான பிரிவினர் 3 ஆம் வினாவையே தெரிவுசெய்துள்ளனர். இதன் வீதம் 95%மாகும். இரண்டாம் வினாத்தாளில் தெரிவு வினாக்களின் குறைந்த இலகுதன்மை 7 ஆவது வினாவிற்கே காணப்படுவதுடன் அதன் இலகுதன்மை 45%மாகும்.

தெரிவு வினாக்களில் இரண்டாவது மிகக் கூடிய பிரிவினர் 5 ஆம் வினாவையே தெரிவுசெய்துள்ளதுடன் அதனைத் தெரிவுசெய்தோர்களின் எண்ணிக்கை 79%மாக இருந்ததுடன் அதன் இலகுதன்மை 48% மாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

# பகுதி III

3.0 **விடையளிக்கும்போது அவதானிக்கப்பட வேண்டிய விடயங்களும் ஆலோசனைகளும்** :

3.1. **விடையளிக்கும் போது அவதானிக்கப்பட வேண்டிய விடயங்கள்** :

**பொதுவான அறிவுருத்தல்கள்**

* வினாப்பத்திரத்திலுள்ள பிரதான அறிவுறுத்தல்களை வாசித்து விளங்கிக்கொள்ள வேண்டும். அதாவது ஒவ்வொரு பகுதியிலுமிருந்து எத்தனை வினாக்களுக்கு விடையளிக்கப்பட வேண்டும், எந்த வினா கட்டாயமானது, எவ்வளவு காலம் வழங்கப்பட்டுள்ளது, எவ்வளவு புள்ளிகள் கிடைக்கப்பெறும் என்பன தொடர்பாகக் கவனத்திற் கொள்ளப்பட வேண்டும்.

* வினாக்களை நன்கு வாசித்து சரியாக விளங்கி வினாக்கள் தெரிவு செய்யப்பட வேண்டும் என்பதுடன் வினாவைத் தெரிவு செய்யும்போதும், விடையளிக்கும்போதும் அதனைப் பயன்படுத்துதல் வேண்டும்.

* விடைகள் தெளிவான கையெழுத்தில் எழுதப்படல் வேண்டும்.

* பரீட்சார்த்திகள் விடைத்தாளின் எல்லாப் பக்கங்களிலும் உரிய இடங்களில் தமது சுட்டெண்ணை எழுதுதல் வேண்டும்.

* வினாத்தாள் I இல் 1 - 30 வரையான வினாக்களுக்கு விடையளிக்கும்போது மிகச் சரியான விடையினை தேர்ந்தெடுத்தல் வேண்டும்.

* வினாத்தாள் I இல் 31 - 50 வரையான வினாக்களுக்கு விடையளிக்கும்போது நீண்ட விளக்கங்களை உள்ளடக்கத் தேவையில்லை.

* வினாத்தாள் II இற்கு விடையளிக்கும்போது எல்லா பிரதான வினாக்களையும் புதிய தாளில் எழுதத் தொடங்க வேண்டும்.

* விடைத்தாள் இணைக்கப்படுமாயின் சரியாக இலக்கமிடப்பட்டு தாள்கள் சரியாகக் கட்டப்படல் வேண்டும்.

* வினா இலக்கம், உபபிரிவுகளின் இலக்கங்கள் சரியாக எழுதப்பட வேண்டும்.

* வினாவில் கேட்கப்பட்டுள்ளவாறு விடைகள் தர்க்கரீதியாகவும், பகுப்பாய்வு முறையிலும் சமர்ப்பிக்கப்படல் வேண்டும்.

* ஒவ்வொரு உபபகுதிகளையும் சரியாக வாசித்து ஒவ்வொரு பகுதிகளையும் இலக்கமிட்டு அதற்குரிய விடையினை மட்டும் எழுதுதல் வேண்டும்.

* வினாக்களுக்கு விடையளிக்கும்போது வழங்கப்பட்டுள்ள நேரத்தினை சரியான முறையில் முகாமைத்துவம் செய்துகொள்ள வேண்டும்.

* விடையெழுதும்போது சிவப்பு, பச்சை நிற மை பேனாக்களை பாவித்தலைத் தவிர்க்கவும்.



Download Past Papers at : www.freebooks.lk

**விசேட அறிவுருத்தல்கள் :**

1. வினாவுக்கான விடைகள் படிப்படியாக முன்வைக்கப்படல் வேண்டும்.
2. விடையளிக்கும் போது ஆயிரங்களில் முன்வைப்பதாயின் சகல தொகைகளும் ஆயிரங்களில் என்பதைக் குறிப்பிட வேண்டும். (அதாவது 'ரூபா 000' என)
3. ஒவ்வொரு வினாவுக்குமான முற்செய்கைகள் அந்தந்த வினாக்களுடன் முன்வைக்கப்படல் வேண்டும்.
4. வினாவின் உபபகுதிகள் காணப்படுமாயின், விடைக்குரிய உபபகுதி இலக்கத்தினை சரியாக குறிப்பிட்டு முன்வைத்தல் வேண்டும். வினாவின் உபபகுதிகள் காணப்படுடமாயின், அதன் விடைகளை எல்லா இடங்களிலும் பரவலாக எழுதக் கூடாது.
5. இலக்கங்களைத் தெளிவாக எழுதுதல் வேண்டும். நேர், மறை இலக்கங்கள், உண்மை, பொய், பொருத்தமானது, பொருத்தமற்றது என்பவற்றை தெளிவாக எழுதுதல் வேண்டும்.
6. தான் பெற்ற விடையினைப் பயன்படுத்தி முழுமையான விடையினை வழங்குதல். அதனாவது தான் எழுதிய விடை பிழையானது எனக்கருதி எஞ்சிய பகுதிகளை விடையளிக்காதிலுத்தலை தவிர்த்தல் வேண்டும்.
7. கம்பனியின் நிதிக் கூற்றுக்களைத் தயாரிக்கும்போது கணக்கீட்டுக் குறிப்புகள், செய்கை என்பவற்றுக்கிடையிலான வேறுபாடுகளை சரியாக இனங்கண்டு விடையளித்தல் வேண்டும்.



Download Past Papers at : www.freebooks.lk

## 3.2. கற்றல் - கற்பித்தல் தொடர்பான கருத்துகளும் ஆலோசனைகளும் :

* பாடத்திட்டம், ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி, 1995 ஆம் 15 ஆம் இலக்கம் கொண்ட கணக்கீட்டு, கணக்காய்வு நியமச் சட்டம், 2007 ஆம் 07 ஆம் இலக்கம் கம்பனிச் சட்டம், உயர் தரத்திற்கு விதந்துரைக்கப்பட்ட கணக்கீட்டு நியமங்கள் தொடர்பில் கல்வி வெளியீட்டுத் திணைக்களம் வெளியிட்டுள்ள,

  (1) கணக்கீட்டு நியமங்களும், கம்பனிக் கணக்குகளும்

  (2) கிரய, முகாமைத்துவக் கணக்கீடு.

  என்பவை தொடர்பில் ஆசிரியர்களைப் போன்றே மாணவர்களும் அறிந்து கொள்வதுடன், அவற்றைப் பயன்படுத்துதலும் வேண்டும்.

* கணக்கீட்டு வினாப்பத்திரத்திற்கு சிறப்பாக விடையளிப்பதாயின் வகுப்பறைக் கற்றல் - கற்பித்தல் கருமங்களின் போது வணிக உலகில் நடைமுறை ரீதியிலான பிரச்சினைகளை அடிப்படையாகக் கொண்டு பயிற்சிகளை தயாரித்து வழங்கள் மிக முக்கியமாகும்.

* அச்சுப்பதிக்கப்பட்ட பயிற்சிகளை வழங்க முடியுமாயின் கூடுதலாக பயிற்சிகளை வழங்கி விடைகளை எழுதும் சந்தர்ப்பங்கள் மாணவர்களுக்கு பெற்றுக் கொடுத்தல் வேண்டும்.

* வாசித்தல், எழுதுதல் என்பவற்றில் காணப்படும் குறைபாடு காரணமாக வினாக்களை விளங்கிக் கொள்வதிலும் வெளிப்படுத்தும் திறனிலும் காணப்படும் பிரச்சினைகளை இழிவு படுத்திக் கொள்வதற்கான வேலைத்திட்டங்களை நடைமுறைப்படுத்துதல் வேண்டும்.

* நடைமுறை வணிக உலகில் பயன்படுத்தப்படுகின்ற முதன்மை ஆவணங்கள், கணக்கீட்டறிக்கைகள் என்பவற்றை வகுப்பறைக் கற்பித்தல் துணைச் சாதனங்களாக பயன்படுத்தி பாடத்தினை விருத்தி செய்வதற்குத் தேவையான அனுபவங்களை உறுதி செய்வதற்கு வழிகாட்டுதல் அவசியம்.

  உதாரணம் - மூல ஆவணங்கள்
  - வங்கிக் கூற்று
  - சம்பளப் பட்டியல்
  - இருப்பு அறிக்கை (இன்வென்றி அறிக்கை)
  - வருடாந்த அறிக்கை

* இப்பாடம் தனக்கு மாத்திரமன்றி சமூகத்திற்கும் சம அளவில் முக்கியத்துவமுடைய பாடமொன்றாகையால் சகல வேளைகளிலும் கற்றல் செயலொழுங்குகளை நல்ல விளக்கத்துடனும், தர்க்க ரீதியாகவும், மனதை ஈர்க்கும் வகையிலும் பாட அலகினை ஏன் கற்றல் வேண்டும் என்பது தொடர்பில் மாணவர்களின் மனதில் பதியும் வகையிலும் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகள் விருத்தி செய்யப்படல் வேண்டும்.

* இப்பாடமானது தீர்மானமெடுத்தலுக்கு முக்கியமான பாடமொன்றாக இருப்பதனால் ஒவ்வொரு பாட அலகுகளையும் கற்பிக்கும் போது கற்றல் உபகரணங்களையும், கருவிகளையும் பாவிப்பதனூடாக மகிழ்ச்சியான கற்றற் சூழலொன்றைக் கட்டியெழுப்புவதற்கும், திறன்களை விருத்தி செய்வதற்குமான சந்தர்ப்பத்தை பெற்றுக் கொடுத்தல் பொருத்தமானது.

* பாடத்திட்டத்தில் இறுதிப் பாடப்பகுதியினை அடிப்படையாகக் கொண்டு உள்ளடக்கப்பட்டுள்ள வினாக்களுக்கு விடையளிக்கும் போக்கானது குறைந்த மட்டத்தில் இருப்பதுடன், அப்பகுதிகளுக்கு விண்ணப்பதாரிகள் பெறும் புள்ளிகளும் குறைந்த மட்டத்தில் காணப்படுவதை அவதானிக்க முடிகின்றது. அதற்கேற்ப கற்றல் - கற்பித்தல் செயன்முறைகளின்போது அப்பாடப்பகுதியை பூரணப்படுத்துதற்கு கூடிய கவனம் எடுக்கப்படல் வேண்டும்.

* நவீன பாட அறிவினை விருத்தி செய்து கொள்வதற்கும், இற்றைப்படுத்துவதற்கும் தொடர்ச்சியாக செயற்படும் ஆசிரியர்கள், திறன்கள் நிறைந்த ஆக்கச்சக்தியுள்ள நபர்கள் என்பதுடன் அவர்கள் மாணவர் சமுதாயத்திற்கு பாரிய பங்களிப்பை வழங்குபவர்களுமாவர்.



Download Past Papers at : www.freebooks.lk

